# ஸ்ரீ ராமாநுஜன் 354



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
மஹாவித்வான் அண்ணங்கராசாரியர்

தொகுதி 30 | பிங்களஹு கார்த்திகைமீ 10—12—1977 | பகுதி—6

## மார்கழித்திங்களின் மாண்பு

மார்கழித்திங்கள், வந்தேன் வந்துவிட்டேனென்கிறது. மார்கழி மாதத்தின் சிறப்பை நாம் ஒவ்வொருவரும் கட்கூடாகக் காணுநின்றோம். அறிவிற் சிறந்த பெரியாரோடு அறியாத பிள்ளைகளோடு வாசியறப் பெரும்பான்மையர் சிறுகாலையெழுந்திருந்து நீராடிக் கோவிலுக்குப் போய்வருவதென்கிற முறைமை எங்கும் காணுநின்றோம். இது தவிர, ஆங்காங்குப் பலர் கூடித் திருப்பாவை கொண்டும் கீதகோவிந்தாதிகள் கொண்டும் பகவத்குணாநுபவம் செய்துபோருவது இம்மாதத்திற்குத் தனிப்பட்ட விசேஷமன்றோ?

பகவத்கீதையில், பத்து பதினொன்று ஆகிய இரண்டத்யாயங்களும் மிக்க சிறப்புப்பெற்றவை. பத்தாமத்யாயம் விபூத்யத்யாயமென்றும், பதினோராமத்யாயம் விச்வரூபாத்யாயமென்றும் ப்ரஸித்தி பெற்றவை. இவ்விரண்டு அத்யாயங்களாலும் ஸ்ரீமந்நாராயணனுடைய பரத்துவம் மிகமிக மேம்படப் பேசப்படுகின்றது. பத்தாமத்யாயம் தொடங்கும்போதே பகவானுடைய வார்த்தை மிகவிலக்ஷணமாகவுள்ளது. (அதாவது—) *பூய ஏவ மஹாபாஹோ! ச்ருணு மே பரமம் வச:, யத் தே அஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா* என்பது கீழே ஏழு எட்டு ஒன்பது அத்யாயங்களைக் கேட்ட அர்ஜுநன் எம்பெருமானுடைய பெருமையை நன்கறிந்து மிகமிக ரஸித்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்து கொண்டு நிற்கிறான்; இன்னமும் நாம் கேட்கவேண்டியது என்ன இருக்கிறது! என்றும் நினைத்திருந்தான் போலும். அதனையறிந்த கண்ணபிரான், அர்ஜுநனை வியாஜமாகக்கொண்டு இன்னமும் உலகுக்கு உணர்த்தவேண்டிய விஷயங்கள் பலபல இருக்கின்றனவே, அவற்றையெல்லாம் வெளியிட்டாகவேணுமே யென்று திருவுள்ளம்பற்றி *பூய ஏவ மஹாபாஹோ! ச்ருணு மே பரமம் வச:*என்று தொடங்குகிறான். அடுத்த சுலோகம்—*ந மே விதுஸ் ஸுரகணா

ப்ரபவம் ந மஹர்ஷய:* என்பது. ப்ரவபம் என்பதற்கு ப்ரபாவம் என்று ஸ்வாமி பாஷ்யம். என் பெருமையைத் தேவர்களுமறியார், மஹர்ஷிகளுமறியார்—என்று அவதாரிகையிட்டு வரியடைவே தன் பெருமைகளைச் சொல்லிக்கொண்டுபோய், *விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிஞ் ச ஜநார்தந!, பூய: கதய த்ருப்திர் ஹி ச்ருண்வதோ நாஸ்தி மே அம்ருதம்* என்கிற பதினெட்டாம் சுலோகத்தினால் அர்ஜுனன் தானே விரும்பிக் கேட்கும்படியாகப் பண்ணி, உடனே *ஹந்த! தே கதயிஷ்யாமி விபூதீராத்மந: சுபா:, ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட! நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே* என்று அற்புதமான விஷயங்களை உபதேசிக்கத் தொடங்குகிறான் கண்ணன். *ஆதித்யாநாமஹம் விஷ்ணு:* என்கிற இருபத்தோராம் சுலோகம் தொடங்கி *ஜ்ஞாநம் ஜ்ஞாநவதாமஹம்* (38) என்பதீருக அத்யாய ஸமாப்தியளவும் தன் விபூதிவிஸ்தாரத்தைச் சொல்லி முடிக்கிறான். அதனிடையில் *மாஸாநாம் மார்க்கஸீர்ஷோஹம் ருதூநாம் குஸுமாகர:* என்கிற சுலோகம் ப்ரக்ருதத்தில் சிந்தனை செய்யத்தக்கது. மாதங்களுக்குள்ளே நான் மார்கழிமாதமாகிறேன் என்றும், ருதுக்களுக்குள்ளே நான் வஸந்தருதுவாகிறேன் என்றும் இதனால் தெரிவிக்கப்பட்டதாகிறது. ஆக ஒருவருஷத்தில் மூன்று மாதங்களுக்கு ஏற்றம் தெரிவிக்கப்பட்டதாகிறது—மார்கழி சித்திரை வைகாசி—ஆகிய மூன்று மாதங்கள் மேம்பட்டவையாகின்றன. இவை வைஷ்ணவ மாஸங்கள் என்பதனாலேயே ஏற்றம் பெற்றன. எம்பெருமானாரவதாரத்தினால் சித்திரை மாதமும், நம்மாழ்வாரவதாரத்தினால் வைகாசி மாதமும், திருப்பாவையவதாரத்தினால் மார்கழி மாதமும் சிறப்புப்பெற்றனவென்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் அபிமானிப்பதில் குறையில்லை.

பிள்ளைப்பெருமாளையங்கார் *யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீயென்றால் அஃதுனக்கு வியப்பாமோ?* என்கிறார் கலம்பகத்தில். இந்த மஹார்த்தத்தை மூதலிக்கின்றது (கீதையில்) பதினோராமத்யாயம். பிரமன் சிவனிந்திரன் முதலான ஸகல தெய்வங்களும் தன்னுள்ளே அடங்கி யொடுங்கியிருப்பதைக் காட்டுகிறான் கண்ணபிரான். அதைக்கண்ட அர்ஜுனன் இது இந்திரஜாலமென்னாதே பரமார்த்தமென்று ப்ரதிபத்திபண்ணி மகிழ்ந்திருப்பது கீதையிலேயே ஸ்பஷ்டமாக வுள்ளது. ஆகவே ஸ்ரீ மஹாவிஷ்ணுவையே வழிபடும் பக்தர்களுக்கு மார்கழி சித்திரை வைகாசி மாதங்களின் மேம்பாடு மிகமிகக் குலாவத்தக்கதாம்

## "ஆண்டாளளித்த அமுதவெள்ளம்"

பத்ராதிப (P. B. A) ஸ்வாமியால் 'ஆண்டாளளித்த அமுதவெள்ளம்' என்னும் பெயர்பூண்ட திருப்பாவை விசேஷார்த்தச் சிறுநூலொன்று இன்று (7—12—77ல்) வெளியிடப்பட்டது. ஆண்டாளருளிச் செய்த திருப்பாவை முப்பது பாசுரங்களுக்கும் ஸம்க்ஷேபமான உள்ளுறை பொருள் விளக்கமிது. விலை ஒரு ரூபாய்மட்டும். கிடைக்குமிடம் க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3. நேற்றை ஐப்பசித் திருமூலத்தன்று வெளியிடப்பட்ட ஸ்ரீமத் வரவரமுநிவர்ய ஸித்தாந்தஸாரம் கிடைக்குமிடமும் அதுவே. விலை 2—00. இவை சென்னையிலும் காலக்ஷேபங்கள் நடைபெறுமிடங்களில் கிடைக்கும்.

# ★ உபந்யாஸக ஸௌபாக்ய மாலை ★

## பகவத் விஷய ரஸாநுபவம்

### (நம்பிள்ளை திருநக்ஷத்ராநுபவம்)

நாம் அநுபவிக்கும் இதிஹாஸ புராண நூல்களும் மற்றுமுள்ள அத்யாத்ம சாஸ்த்ரங்களுமெல்லாம் எம்பெருமானைப் பற்றியவையே யாதலால் அவற்றையும் பகவத் விஷயமென்னத் தட்டில்லை; ஆனாலும் பகவத்விஷயமென்கிற வ்யபதேசம் திருவாய்மொழி வியாக்கியான மொன்றுக்கே நெடுநாளாக வழங்கி வருகின்றது. திருவாய்மொழி காலக்ஷேபத்தையே எங்கும் பகவத்விஷய காலக்ஷேபமென்கிறோம். காஞ்சீபுரத்திற்குப் பெருமாள்கோயில் என்று அநாதிகாலமாக வ்யவஹாரமுள்ளது; இதைக் கேட்பவர்கள் சிலர் ''மற்றவை பெருமாள் கோயிலன்றோ? பிள்ளையார் கோவிலோ? என்கிறார்கள். அதுபோலவே 'மற்றவை பகவத் விஷயமல்லவா?' என்றும் சிலர் கேட்பதுண்டு. ஆரைக்கேட்பது? பூருவாசாரியர்கள் காலந்தொட்டு இப்படியே வ்யபதேசம் நிகழ்ந்துவாரா நின்றது. உண்மையில் திருவாய்மொழியைக் கொண்டு அநுபவிப்பதுதான் பகவத் விஷயாநுபவமாகும். *நமாம்யஹம் த்ராவிடவேத ஸாகரம்* என்றபடி திருவாய்மொழி ஒருகடல். *ஜீயாத் பராங்குச பயோதி:* என்றபடி, திருவாய்மொழியை யருளிச்செய்த நம்மாழ்வாரும் ஒரு கடல். திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யனான எம்பெருமானே *பெரும்புறக்கடல். திருவாய்மொழிக்கு வியாக்கியானமான ஈடு முப்பத்தாருயிரமோ* அப்ரமேய மஹோததி. இங்ஙனே ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வர்க்கமெல்லாம் கடலாகவே காண்கிறது. ஸாரமாகச் சில விஷயங்கள் கேளீர்;—

### — வடமொழி வேதத்திற்கொரு நான்முகன் : தென்மொழி வேதத்திற்கொரு நான்முகன்

வடமொழி வேதமானது எப்படி அவதரித்ததென்று பார்க்கில் *அநாதிநிதநா ஹ்யேஷா வாக் உத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா* என்கிறபடியே நான்முகக்கடவுள் மூலமாய் அவதரித்ததாகத் தெரியவருகிறது *யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை* என்கிற உபநிஷத்தும் எம்பெருமானிடத்தில் முதன்முதலாக நான்முகன் உபதேசம் பெற்றதாகத் தெரிவிக்கின்றது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் 'ஸ்ப்தோத்புத்த விரிஞ்சபூர்வஜநதாம் அத்யாப்ய' என்று நான்முகனையே முந்தின அத்யேதாவாகத் தெரிவித்தருளினர். ஆக வடமொழி வேதத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகன் நான்முகனைப்போலே தென்மொழி வேதமாகிய த்ரமிடோப நிஷத்துக்கும் நான்முகனே ப்ரதம ப்ரவர்த்தகனாகவுள்ளான். எங்ஙனே யென்னில்; ஒரு பரமபக்தர்—''சதுர்முக ஸமாக்க்யாபி சடகோபமுநௌ ஸ்திதா, ஸ்வவாசா மாத்ரு துஹித்ரு ஸகீவாசா ச வர்ணநாத்'' என்று சொல்லிவைத்தார். இதன் பொருளாவது, ஆழ்வார் நான்கு மூகங்களாலே பேசியுள்ளபடியைப் பார்க்கிறோம். நான்கு முகங்கள் எவை என்னில்; [ஸ்வவாசா] ஆழ்வார் தாமான தன்மை குலையாமல் குருகூர்ச் சடகோபனாகவே யிருந்து *உயர்வற வுயர்நலம்* *வீடுமின் முற்றவும்* பத்துடையடியவர்* முதலான பதிகங்கள் பேசியிருப்பதனாலும். [மாத்ரு வாசா] *ஆடியாடியகங்கரைந்து * *பாலனாயேழுலகுண்டு * மண்ணையிருந்துதுழாவி*

முதலான பதிகங்கள் தாய்வாக்காகப் பேசியிருப்பதனுலும். [துஹித்ருவாசா] *அஞ் சிறையமடநாராய்* *வாயுந்திரையுகளும்* முதலான பதிகங்கள் மகள் பேச்சாகப் பேசியிருப்பதனுலும், [ஸகீவாசா] *தீர்ப்பாரையாமினி* *துவளில் மாமணிமாடம்* *கருமாணிக்கமலே* என்கிற பதிகங்கள் தோழி பேச்சாகப் பேசியிருப்பதனுலும் ஆழ்வார்க்கு நான்கு முகங்கள் தேறினதாகத் தெளிக.

## — ஆழ்வார்க்குண்டாகும் பெண்பாவனையின் பொருத்தம் —

நூறுபதிகங்கள் கொண்ட திருவாய்மொழியாயிரத்தில் எழுபத்து மூன்று பதிகங்கள் தம்முடைய திருவாக்காலே (ஆண்மை குன்ருமல்) பேசினவை; மிகுந்த இருபத்தேழு பதிகங்களில் பதினேழு பதிகங்கள் தலைமகள் பேச்சாலே பேசினவை; ஏழு பதிகங்கள் தாய் பேச்சாலே பேசினவை. மூன்று பதிகங்கள் தோழி பேச்சாலே பேசினவையென்று கண்டு கொள்வது. தலைமகளென்பது யாரை? தாயாரென்பது யாரை? தோழியென்பது யாரை? என்று தெரிந்துகொள்ளவேண்டும். இதை மிக விளக்கமாக ஈண்டு நிரூபிக்கிறேன். நம்மாழ்வார் தம் வாயாலும் வேற்று வாயாலும் பேசுகிருரென்பதை முன்னம் குறிக்கொள்ளவேணும். தம் திருவாக்காலே பேசுவதென்பதில் விளக்கம் வேண்டியதில்லை. அஃது இயற்கையான பேச்சென்பது யாவருமறிந்தது. வேற்று வாயாலே சொல்லுவதாவது பெண்மையெய்திப் பேசுவதாம். ஆழ்வார் ஆடவர்களில் தலைவராக அவதரித்திருக்கச் செய்தேயும் "பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா: ஜகனம் கனம், யாஸ் ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ்தா: பும்பாவம் மநஸா யயு:" என்று மஹாபாரதத்தில் சொன்ன கட்டளையிலே (அதாவது, விராட நகரத்தில் பாண்டவர்கள் அஜ்ஞாதவாஸம் பண்ணினபோது நீராடா நின்ற த்ரௌபதியின் ஒப்புயர்வற்ற ஸௌந்தர்ய லாவண்யாதி அதிசயங்களைக்கண்ட பெண்டுகள் 'ஐயோ! நாம் ஆண்களாகப் பிறவாமற் போனேமே' என்று நினைத்து மாநஸிகமாகப் புருஷபாவனையை யெய்தினராம். இதை வேதாந்ததேசிகனும் *பாஞ்சாலீ காத்ர சோபாஹ்ருத ஹ்ருதய வதூவர்க்க பும்பாவ நீத்யா* என்கிற சுலோகத்தினுல் குறிப்பிட்டுவைத்தார். ஆகவே புமானன ஆழ்வார்க்குப் பெண்பாவனை ஏற்கும்.

## — புமான்கள் பெண்மை காட்டுவதன் உட்கருத்து —

நம் பூர்வாசாரியர்கள் மிகப் பொருத்தமாக இவ்விஷயத்தில் ஒரு காரிகை இட்டருளியுள்ளார்கள். அது திருநெடுந்தாண்டக வியாக்கியானத்தில் கையாளப் பட்டுள்ளது. (அதாவது) "ஸ்வாமித்வ ஆத்மத்வ சேஷித்வ பும்ஸ்த்வாத்யா: ஸ்வாமிநோ குணா:, ஸ்வேப்யோ தாஸத்வ தேஹத்வ சேஷத்வ ஸ்த்ரீத்வ தாயிந:" என்பதாம். இதன் பொருளாவது—எம்பெருமான் ஸர்வஸ்வாமி யென்றும், ஸர்வ பூதாந்தராத்மாவென்றும் ஸர்வசேஷியென்றும் புருஷோத்தமனென்றும் சொல்லப்படுகிருன்; அவன் ஸ்வாமியாயிருப்பதற்குச் சேர நாம் தாஸர்களாகிருேம். அவன் ஆத்மாவாயிருப்பதற்குச் சேர நாம் சரீரபூதர்களாகிருேம். அவன் சேஷியாயிருப்பதற்குச் சேர நாம் சேஷ பூதர்களாகிருேம். அவன் புருஷோத்தமனுயிருக்கும் தன்மையானது நமக்குப் பெண்மையை விளைக்கின்றது என்கை. அவனும் ஸ்வாமியாய் நாமும் ஸ்வாமியாயிருக்க முடியுமோ? அவனும் அந்தராத்மாவாய் நாமும் அந்தராத்

மாவாயிருக்க முடியுமோ? அவனும் சேஷியாய் நாமும் சேஷியாயிருக்க முடியுமோ? சேஷித்வமாவது கைங்கரியம்கொள்பவனுகை; சேஷத்வமாவது தொண்டுசெய்பவனுகை. இவ்விரண்டும் ஏகாச்ரயத்தில் இராதன்றே. அப்படியே அவனும் புருஷனுய் நாமும் புருஷராயிருக்க முடியுமோ? எங்ஙனே முடியும்? ஆகவே தாஸத்வ தேஹத்வ சேஷத்வங்கள் போலே ஸ்த்ரீத்வமும் சேதனர்க்கு இயற்கையானதேயென்று தேறிற்று. புமர்ஜைப் புமான்களே அனுபவிப்பதென்பதில் ரஸமில்லையே. ஆண்களாய்ப் பிறந்தவர்களுக்கு சரீர தர்மமாகப் பெண்மை ஸம்பவிப்பதன்ருகிலும் பாவநாவிசேஷ அபரபர்யாயமான ஸ்த்ரீத்வம் ஸம்பவிக்கக் குறையில்லை. அத்யந்த பாரதந்த்ரியமன்றே ஸ்த்ரீதர்மம். அப்படிப்பட்ட பாரதந்த்ரியத்தை ப்ரகாசப் படுத்துவதுதான் பெண்ணுகை.

**– ஈச்வர சேதநர்களுக்குப் பதிபத்நீபாவம் திருமந்த்ரஸித்தமென்பது –**

எம்பெருமானுக்கும் நமக்கும் நவவித ஸம்பந்தம் திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தில் தேறுவதாக ஆசாரியர்கள் நிரூபிக்கிருர்கள். அவற்றுள் பதிபத்னீபாவ ஸம்பந்தமென்பது நான்காவதாகும்; திருமந்திரத்தில் இது எந்த சொல்லால் தேறுகின்றதென்னில், பிரணவத்தில் இடைச் சொல்லான உகாரத்தினுல் தேறுகின்றது. உகாரம் அவதாரணுர்த்தகமாய் சேதனன் எம்பெருமானுெருவனுக்கே சேஷப்பட்டவனென்றுகாட்டி [அநந்யார்ஹத்வத்தைக்காட்டி] "கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானையல்லால் அறியாக் குலமகள் போல்" என்ற குலசேகராழ்வார் ஸ்ரீஸூக்தியின்படி பதிபத்நீபாவ ஸம்பந்தத்தை (அல்லது, பர்த்ரு பார்யா பாவரூப ஸம்பந்தத்தை)க்காட்டிநிற்கும். ஆகவே ஜீவாத்மாவின் ஸ்த்ரீத்வம் ஸகல சாஸ்த்ர ஸாரமான திருமந்திரத்தில் ஸித்தமென்றதாயிற்று. எம்பெருமானுடைய அந்தரங்க மஹிஷிகளான ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளின் ஸாதர்மியத்தையே ஆழ்வார் அடைகின்ருர். ஆனது பற்றியே திருவாய்மொழியில் (6-5-10) *பின்னை கொல்! நிலமாமகள்கொல்! திருமகள்கொல்! பிறந்திட்டாள் என்று தோழி பாசுரமுள்ளது. பெரிய திருமொழியிலும் *காவியங்கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப்பாவை யொப்பாள்* என்று தாய் பாசுரமுள்ளது. இவற்றுல் ஆழ்வார் எய்தும் பெண்மை ஸாமான்யமான ஸ்த்ரீத்வமன்று; தேவதேவதிவ்யமஹிஷீஸாதர்மியம் என்றதாயிற்று. இது நமது ஜீவாத்ம பரமாத்மபோகக் கட்டுரையில் விரிவாக விளக்கப்பட்டிருப்பதாம்.

**— பக்திநூல்களுக்குப் பெண்பேச்சு பொருந்தும் வகையும், மகள் தாய்பேச்சுக்களின் ஸ்வாபதேசமும் —**

தலைமகளென்பதும் நாயகி யென்பதும் பர்யாயம். தாயாருடைய த்ருஷ்டியாலே மகளாகிருள். நாயகனுடைய த்ருஷ்டியாலே நாயகியாகிருள். மகளுக்குத் தாயாயொருத்தி யிருப்பதும், நாளடைவில் தோழிமார் ஏற்படுவதும் ஸஹஜம். ஆகவே ஸ்த்ரீ பாவனையில் ஒருபோது தாய் பேச்சும் ஒருபோது மகள் பேச்சும், ஒருபோது தோழிபேச்சும் நிகழ்கின்றன. பக்தியே ச்ருங்கார வகையில் பரிணமிப்பதனுல் இத்தகைய பேச்சுக்கள் பக்திநூல்களுக்கு அவத்யமாகாது. *பக்தி: ச்ருங்காரவ்ருத்த்யா பரிணமதி* என்ருர் வேதாந்த தேசிகனும்.

மணவாள மாமுனிகள் நூற்றந்தாதியில் (4) *அஞ்சிறைய மடநாராய்ப் பதிகத்திற்கு ஸாரமருளிச்செய்பவர் *அஞ்சிறைய புட்கள் தமை ஆழியானுக்கு நீர். என் செயலைச் சொல்லுமென விரந்து—விஞ்ச நலங்கியதும் மாறனிங்கே நாயகனைத் தேடி மலங்கியதும் பத்திவளம்'' என்று அருளிச்செய்தது காண்க. அதில் பத்திவ்ளமென்றது உயிரான பேச்சு. இங்ஙனே தாய்பேச்சாகவும் தலைவி பேச்சாகவும் தோழி பேச்சாகவும் வெளிவருவதற்கு என்ன கருத்தென்பதை இனி விவரிக்கக் காணீர்

பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில் த்வய ப்ரகரணத்தின் தொடக்கத்தில் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களை யருளிச்செய்யுமிடத்து ''பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும்'' என்று இரண்டு அருளிச்செய்கிறார். பேறு தப்பாதென்று துணிந்திருக்கையாவது தம்மிடத்தில் உபாயாநுஷ்டான மொன்றுமில்லாமையையும் தாம் செய்த குற்றங்களின் மிகுதியையுங்கண்டு பேறு கிடைக்குமோ கிடைக்காதோ வென்று தளும்பி யிருக்கையன்றிக்கே பேறு தப்பாமல் ஸித்திக்குமென்று திடமான அத்யவஸாயத்தோடிருக்கை; பேற்றுக்கு த்வரிக்கையாவது இந்த அத்யவஸாயங்கொண்டு பேறு சித்தித்தபோது ஸித்திக்கட்டும் என்றிருக்கையன்றிக்கே க்ரமப்ராப்தி பற்றாமல் பதறுகை. ஆக இவ்விரண்டும் ஏகாச்ரயத்தில் இருக்கப் பொருத்தமில்லை; திடமான அத்யவஸாயங் கொண்டிருந்தால் பதறுகை அப்ராப்தம்; பதறுவதானால் அத்யவஸாயத்திற்கு அர்த்தமில்லையாகும். பதறாமலிருப்பதற்கு உறுப்பன்றோ அத்யவஸாயம் இரண்டும் அவர்ஜநீயமாயிருக்கையாலே தாய் பேச்சாலே அத்யவஸாயத்தை வெளியிடுவதும், மகள் பேச்சாலே பதற்றத்தை [பேற்றுக்கு த்வரிக்கையை] வெளியிடுவதுமாய்ச் செல்லுகிறது. தாய்-அத்யவஸாய நிஷ்டை; மகள்—த்வரா நிஷ்டை என்றதாயிற்று.

## — தோழி தாய் மகள் - பேச்சுக்களின் சுவை யாராய்ச்சி —

திருவாய்மொழியில் (5-5) *எங்ஙனேயோ வன்னைமீர்காளென்கிற பதிகத்தைக் கொண்டு தோழி தாய் மகள் பேச்சுக்களின் சுவைகளை ஆராய்வோம்! இதில் பாசுரந்தோறும் 'அன்னையரும் முனிதிர்' 'அன்னைகாணகொடாள்' என்கிறசொல் தொடர்ந்து வருவதைக் காண்கிறோம். [முனிதலாவது சீறுதல், காணகொடாளென்றது வெறுப்புக்கொள்ளுகிறாளென்றபடி.] இது மகள் பாசுரமான பதிகம். தாய்க்கு மகள்மேல் சீற்றமும் வெறுப்பும் மிகமிகவுண்டாகியிருப்பதாக இதனால் தெரியவருகிறது. இவையுண்டாகைக்குக் காரணமென்னவென்று பார்க்கவேணும்; அது மகள் வாயினாலேயே ஸ்பஷ்டமாக வெளிவந்துள்ளது. எங்ஙனேயென்னில்; ''மேலும் வன்பழி நங்குடிக்கிவளென்று அன்னை காணகொடாள்'' ''நிறைந்த வன்பழி நங்குடிக்கிவளென்று அன்னை காணகொடாள்'' ''கழியமிக்கதோர் காதலள் இவளென்று அன்னை காணகொடாள்'' என்றன்றோ வசனவ்யக்தியுள்ளது. இம்மகளால் ப்ரபந்நஸந்தானத்திற்குப் பெரும்பழி விளையுமென்றும், திடமான அத்யவஸாயங் கொண்டிருக்கையன்றிக்கே மேல்விழுந்து பதறுவதற்குறுப்பான எல்லைகடந்த அன்பையுடையவளாயிருக்கிறாளிவளென்றும் வாய்விட்டுச் சொல்லியேயன்றோ தாயானவள் மகளை க்ஷேபிக்கின்றாள். மகள்பதறுவது ப்ரபந்நஸந்தானத்திற்குப் பெரும்பழியென்று தாயார்முடிவுகட்டினதாக

இங்கு ஸ்பஷ்டமாகிறது. ஆனால் மேலே (6–7.) *உண்ணுஞ்சோறு பருகுநீர்ப்பதிகத்திலே (பா. 4.) "கொல்லை யென்பர்கொலோ! குணம் மிக்கனளென்பர் கொலோ!" என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து, இதுநிர்த்தாரணம் பண்ணவொண்ணாத விஷயமென்று தாயார் கருதியிருப்பதாகத் தெரியவருகின்றது. இப்பாசுரத்தின் கருத்தாவது என் மகளுடைய நடவடிக்கையை உலகத்தார் வெறுப்பர்களோ ? அன்றி உகப்பர்களோ ? பேறு தப்பாதென்று துணித்திருப்பதே கடமையென்று திண்ணிய அத்யவஸாயமுடையார் 'இவள் இங்ஙனே பதறுகையாவதென்?' என்று வெறுக்கக்கூடும். 'பெறும்பேற்றின் கனமறிந்தால் அதற்குப் பதருமலிருக்க முடியுமோ' என்றிருக்கு மவர்கள் உகக்கக்கூடும். உலகத்தாருடைய நினைவை ஒருபடி நிர்ணயிக்க முடியாதாகையாலே, அவத்யம் சொல்லும்படி யாகுமோ ? அன்றி சிலாகிக்கும்படி யாகுமோ தெரியவில்லையேயென்று தாயார் தளும்பி நிற்கும்படி இப்பாசுரத்தினால் தெரியவருவதால் தாயின் கருத்தாலும் மகளுடைய பதற்றம் பரிபூர்ணமாகப் பழிக்கப்படுவதில்லையென்பது விளங்கும்.

மேலேயெடுத்த *எங்ஙனேயோபதிகத்தில் தாய்மார் சீறுவதைமட்டும் சொல்லி நில்லாமல் அவர்களோடு தோழிமார்களையுஞ் சேர்த்து அவர்களும் சீறுவதாகச்சொல்லியிருக்கிறது (9.) * முன்னின்றுயென்று தோழிமார்களும் அன்னையரும் முனிதிர்* என்றன்றே பாசுரமுள்ளது. அன்றியும், மேலே *மானேய் நோக்குப்பதிகத்தில் (2.) "என்றுகொல் தோழிமீர்காள் ! எம்மைநீர் நலிந்தென் செய்தீரோ ?" என்று தோழி தாய்மாரோடு சேர்ந்து நலியுமளவேயன்றிக்கே தனிப்படவும் நலிவதாகக் காட்டப்படுகிறதே, இது பொருந்துமோ? தலைவிக்கு அந்தரங்கமா யிருப்பவளன்றோ தோழி. அவளும் நலிவதாகச் சொல்லத் தகுமோவென்கிற சங்கை உதிதாகத் தோன்றும். இதற்குக் கேண்மின். தோழியானவள் தலைவியிடத்தில்மட்டும் அன்பு கொண்டு தாயாரோடு உடன்பட்டிருந்திலளாகில் அவள் தலைவியோடு கூடிவாழவே முடியாது. "பூனைக்கும் தோழன், பாலுக்குங் காவல்" என்கிற விநோதோக்திரீதியிலே தாய் பக்ஷத்திலிருப்பதாகவும் காட்டிக்கொள்ளவேண்டும் தோழி. தோழி தாய் மகளாகிய மூவருடையவும் பாசுரங்களை ஆங்காங்கு உற்று நோக்கினால் இன்சுவைமிக்க சில விசேஷங்கள் புலப்படும். சிறிது விவரிக்கிறேன். "என் பெண்மகளை யெள்கித் தோழிமார் பலர் கொண்டுபோய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்" என்கிற தாய்பாசுரத்தை நோக்குமிடத்து தாயார் தோழிமார்மேல் பழியிடுவதாக விளங்கும். என் மகளுக்கு பகவத விஷயத்திலே யுண்டான அவகாஹனமாகிற அனர்த்தம் தோழிமார் பலராலே வந்ததையோ! என்றன்றே இப்பாசுரத்தில் சொல்லிற்று. தோழி பாசுரமோ இதற்கு எதிராகவுள்ளது. தோழி சொல்லுவதாவது. "குழறுமோசை விழவொலித் தொலைவில்லிமங்கலங் கொண்டுபுக்கு அமுதமென்மொழியாளை நீர் உமக்காசையின்றியகற்றினீர்" என்றும் "கரைகொள் பைம்பொழில் தண்பணைத் துலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு. உரைகொளின்மொழியாளை நீர் உமக்காசையின்றி யகற்றினீர்" என்றும் இங்ஙனேயுள்ளது. உத்ஸவாதி காலங்களில் கோவிலுக்குச்செல்லுகிற தாய்மார்கள் தாங்கள் தனியே போகாமல் இப்பெண்பிள்ளையை இடுப்பிலே கொண்டு

போய் 'கண்ணழகைப்பார், மூக்கழகைப்பார், ஆடையாபரணங்களின் அழகைப்பார், என்று காட்டினபடியாலன்றே. இவ்வனர்த்தம் விளைந்தது! என்று தோழி தாய்மார் மீது பழியிடுவதையன்றோ இங்குக் காணுநின்றோம். இப்படி தாய்மாரும் தோழிமாரும் பரஸ்பரம் பழியிடுவதேயல்லாமல் இப்பழி இருவர்க்குமுள்ளதே யென்று தலைவி ஸ்தாபிப்பதையும் காண்கிறோம். எங்ஙனே யென்னில்; தலைவி பாசுரத்தில் "இணக்கி யெம்மை யெந்தோழிமார் விளையாடப் போதுமினென்னப் போந்தோமை" என்றுள்ளது. கண்ணு! நான் உன் வலையில் அகப்பட்டிருக்கவோமட்டேன்; தோழிமாரன்றோ இணங்கவைத்தார்கள்! என்று இதில் சொன்னபடியால் தோழியர்மேல் பழி ஸ்தாபிக்கப்பட்டது தலைவி பாசுரத்திலேயே "எங்ஙனேயோவன்னைமீர்காளென்னை முனிவதுநீர்!" என்று முன்னம் காட்டினதை புற்றுநோக்குமளவில், தோழி தாய்மீதுஇட்ட பழி தலைவியால் ஸ்தாபிக்கப்பட்டமை தெரியும். அன்னைமீர்காள்! நீர் என்னை முனிவது எங்ஙனே? = நீங்களே ஆதியில் என்னை பகவத் விஷயத்திலீடுபடுத்திவிட்டு இப்போது சீறுவது நியாயமா? என்பது இவ்வடிக்கு ஆழ்ந்த கருத்து. ஆக தலைவி தோழிமீதும் தாய்மீதும் பழியை ஸ்தாபித்தபடி விளக்கப்பட்டதாயிற்று.

## — அந்யாபதேசப் பாசுரங்களின் அந்தரங்கமான ஆராய்ச்சி —

தோழியானவள் தாய்மாரோடே கூடிநின்று தலைவியைக் கண்டிப்பதாகக் காட்டுவதும், தாய்மார்க்கு நன்மை சொல்லுவதுபோலவிருந்து தலைவிக்கு அந்தரங்கமாக நன்மை செய்வதும் பாசுரங்களில் காண்பதுண்டு. *எங்ஙனேயோ பதிகத்தில் "முன்னின்றுயென்று தோழிமார்களு மன்னையரும் முனிதிர்" என்கிற தலைவி பாசுரத்தினால் தோழி தாயோடு கூடித் தலைவியைக் கண்டிப்பது கண்டோம். "துவளில் மாமணி மாடமோங்கு துலைவில்லி மங்கலம் தொழுமிவளை. நீரினி யன்னைமீர்! உமக்காசையில்லைவிடுமினோ" என்கிற தோழி பாசுரத்தை மேலெழ நோக்குமிடத்து தாய்மார்களே! அடங்காப் பிடாரியான இவளை விட்டுத் தொலைபுங்கள்; இவள் எக்கேடாவது கெடட்டும்; இவள் நம்வழிவாராள்; இவளோடு உறவையறுத்துக் கொள்வதே நமக்கு நலம்' என்று தாய்மார்க்கு நன்மை சொல்லுவதுபோல் காணப்படும். ஆழ்ந்து நோக்கின் தலைவிக்குத் துணை செய்வதே இதன் கருத்தாகும். தாய்மார் க்ஷேபித்து மகளுடைய செய்கைகளைத் தடைசெய்ய இடமில்லாதபடி பண்ணுவதன்றோ இங்குப் பலிப்பது. இது தலைவிக்குச் செய்த நன்மையேயாம். தலைவியானவள் தாய்மார் தோழிமாராகிற இரண்டு தலையையும் உதறிக் கைவிடுவதுமுண்டு; எங்கே கண்டதென்னில் *ஏலமலர்க் குழலன்னைமீர்காள்! என்னுடைத் தோழியர்காள்! உங்களோடெங்களிடையில்லையே* என்கிற தலைவி பாசுரத்தில் இது காணலாம். தலைவியினிடத்தில் தோழியர்க்கும் தாய்மார்க்கும் மஹத்தான கௌரவ ப்ரதிபத்தி புண்டென்பதைபும் இவ்விருவர் பாசுரங்களிலும் நன்கு காண்கிறோம். *இவளை நீரினியன்னைமீர் உமக்காசையில்லை விடுமினோ* என்று சொன்ன "தாழிதானே பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்!" என்று கொண்டாடினமை காண்கிறோம். "என்னெஞ்சினால் நோக்கிக் காணீர் என்னை முனியாதே" என்று மகள் சொல்லும் படியாகச் சீற்றமும் வெறுப்புங்கொண்டிருந்த தாய்தானே *உண்ணுஞ்சோறு பருகுநீர்

தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்றே யிருப்பளென்மகளென்றும், *ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்றும்படி உலகத்தையெல்லாம் திருத்துமவளென்மகளென்றும், மற்றும் பலபடியாகவும் கொண்டாடிக் கூறுகின்றமை காணுநின்றோம். ஆக, மகள் தோழி தாய்களுக்குப் பரஸ்பரம் ஐக்மத்யக் குறைவுபோல் மேலெழக் காண்பதும், ஆழ்ந்த நோக்கில் மூவர்க்கு முண்டான அந்தரங்கவுகப்பு காண்பதும் ப்ரமாணுரூடமாக நிரூபிக்கப்பட்டதாயிற்று.

## — ஜநகசக்ரவர்த்தியின் கந்யகாதானமும் நம்மாழ்வாருடைய கந்யகாதானமும் —

பெண்மையெய்தின ஆழ்வார் ஸாக்ஷாத் திருமாமகளே யென்பது இனி நிரூபிக்கப்படுகிறது. *காவியங்கண்ணியெண்ணில் கடிமாமலர்ப்பாவை யொப்பாள்* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரமும் *திருமகள் கொல் பிறந்திட்டாள்* என்கிற நம்மாழ்வார் பாசுரமும் அர்த்தவத்தென்று மூதலிக்கப்படுகின்றதென்க. ஜநகதுல ஸுந்தரியான ஸீதாபிராட்டியாரும் நம்மாழ்வாருமொப்பர்;—எங்ஙனே? பிராட்டியானவள் *விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ*என்கிறபடியே ஒருபோதும் எம்பெருமானைவிட்டுப் பிரியாதவள். *ராகவத்வே அபவத் ஸீதா* என்கிறபடியே ராமாவதாரத்தில் பெருமாளுக்குப் பத்நியாக வாய்த்தவள். எம்பெருமான் *மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன்* என்கிறபடியே ஒருவர்க்கும் புத்திரனல்லாதவனாயிருக்கச் செய்தேயும் தசரதாதிகளுக்குப் புதல்வனாகப் பிறந்ததுபோல அவளும் ஒருவர்க்கும் புத்திரியல்லாதவளாயிருக்கச் செய்தேயும் ஜநகாதிகளுக்குப் புதல்வியாகப் பிறந்தாள். ஜநகசக்ரவர்த்தி மற்றவர்களைப் போலன்றிக்கே மஹா வேதாந்தியாகையாலே "பகவத் திவ்யமஹிஷியானவிவள் நம்முடைய புதல்வியல்லள்" என்று தெளிந்திருக்கச் செய்தேயும் *இயம் ஸீதா மம ஸுதா* என்று கலங்கிச் சொல்லித் தனது புத்திரியாகப் பாவித்து அவளைப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தார். இதுதான் ஸீதா விவாஹமென்பது. அதேபோல ப்ரக்ருதத்திலும் காணலாம். நம்மாழ்வாரை ஜனகசக்ரவர்த்தி ஸ்தானத்திலும், அவருடைய ஆத்மாவை ஸீதாபிராட்டி ஸ்தானத்திலும் கொள்க. இவ்வாத்மவஸ்து எம்பெருமானுடையதேயன்றித் தம்முடையதன்று என்கிற தெளிவு ஆழ்வார்க்கு நன்குகவுண்டு; ஆகவேதான் *உதவிக் கைம்மாறு என்னுயிரென்னவுற்றெண்ணில், அதுவுமற்றாங்கவன் தன்னது—அப்பனுக்கு எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே* என்று ஸித்தாந்தமாகப் பேசி முடித்தார். இங்ஙனே தெளிவு இருக்கச் செய்தேயும் உபகாரஸ்ம்ருதியாலே வந்த ஹர்ஷத்தாலே கலங்கி "தோள்களையாரத்தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன்" என்று அவனுடையதான ஆத்மவஸ்துவை (தன்னதுபோல்) அவனுக்கு ஸமர்ப்பித்தார். ஆத்மவஸ்து அமூர்த்தமாயிருக்கச் செய்தேயும் தாளும் தோளுமாய்ப் பணைத்துத் தோற்ற [கன்னிகையைத் தழுவி வரனுக்குக் கொடுக்குமாபோலே] ஆத்மவஸ்துவாகிற கன்னிகையைத் தழுவிக்கொண்டு எம்பெருமானாகிற வரனுக்கு அநந்யார்ஹமாக ஸமர்ப்பித்தாராழ்வார். ஆக ஸீதா விவாஹம்போலே ஆழ்வார் விவாஹமும் தேறிற்று.

## — இரண்டு விவாஹத்திலும் கண்ட ஸந்தோஷாதிசயம் —

ஜனகராஜன் தன்னதல்லாததைத் தன்னதாக ப்ரமித்துக் கொடுத்தாப்போலே ஆழ்வாரும் தம்மதல்லாததொன்றைத் தம்மதாக ப்ரமித்துக் கொடுத்தார். பெற்றுக் கொண்ட பெருமானும் தன்னதல்லாததொன்றைப் புதிதாகப் பெற்றுப்போலே ப்ரமித்து அபரிமிதமாக அகமகிழ்ந்தானென்பது இரண்டிடத்திலும் காணலாயிருக்கின்றது. எங்ஙனே யென்னில்; ஸீதாவிவாஹ ஸமநந்தரம் *தயா ஸ ராஜர்ஷிஸுதோபிராமயா ஸமேயிவாந் உத்தமராஜகந்யயா, அதீவ ராமச் சுசுபே* என்று வான்மீகி பேசும்படி, ஸந்தோஷாதிசயத்தாலே பெருமாள் மிக விளங்கினரென்று கண்டோம். இங்கு ஆழ்வார் விவாஹ ஸமனந்தரத்திலும் எம்பெருமான் அபரிமிதமாக மகிழ்ச்சிகொண்டதை ஆழ்வார் பாசுரத்தாலே நன்கு காண்கிறோம். "என்னுயிரை அறவிலை செய்தனன்" என்று சொல்லி ஆத்மஸமர்ப்பணம் பண்ணினவுடனே ஆழ்வார் கீழ்க்கண்ணாலே எம்பெருமானை நோக்கினர்; 'நாம் தவறுதலாக ஸமர்ப்பித்ததற்கு எம்பெருமான் திருவுள்ளம் புண்பட்டிருக்குமோ! என்று அஞ்சி நோக்கினர்; அவனோ இவர் ஸமர்ப்பித்த ஆத்மவஸ்துவைப்பெற்ற ஹர்ஷாதிசயத்தாலே பளபளவென்று விளங்குவதும், தன்னுடைய திவ்யாவயவங்கள் ஸ்தூலமாகப் பணைப்பதுமாயிருந்தான்; அதனைக் கண்ட ஆழ்வார் "சோதீ! தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் தாள்களாயிரத்தாய்" என்று சொல்லி 'நான் தவறுதலாகச்செய்த செயலாலும் இப்படி ஹர்ஷங்கொள்வதே!' என்று விபந்தார். ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணின அடுத்த க்ஷணத்திலன்றோ இங்ஙனே பேசினது

## —ஜன்மபூமியில் பாசமற்றமை பிராட்டிக்குமாழ்வார்க்குமொக்கும்

பிராட்டி பெருமானைக் கைப்பிடித்தபின்பு பன்னிரண்டாண்டு திருவயோத்தியில் வாழச்செய்தேயும் ஒருநாளும் மிதிலைக்குச் சென்றறியாள் விச்லேஷபீதியாலே; இதனை அவள் தானே தன்வாக்காலே சொல்லிவைத்தாள். (ஆரண்ய. 47-4.) இராவணனோடு வார்த்தையாடும்போது 'ஸமா: த்வாதஸ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஸநே, புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ" என்றாள். மேல் ஸுந்தர காண்டத்தில் (33-18.) திருவடியோடு வார்த்தையாடும்போதும் இதே வார்த்தையைச் சொல்லியிருக்கின்றாள். விவாஹத்திற்குப் பிறகு பன்னிரண்டாண்டு திருவயோத்தியில் அமாநுஷ போகங்களை யநுபவித்துக்கொண்டு பெருமாளோடே கூடிவாழ்ந்தபடியைச் சொன்னாள் இதனால். இதில் ஸமா: என்றது த்விதீயாபஹுவசனம். வியாகரணத்தில் "காலாத்வநோரத்யந்த ஸம்யோகே த்விதீயா" என்பது ஸூத்ரமாகையாலே அவிச்சின்னமாகப் பன்னிரண்டாண்டு உடன்கூடி வாழ்ந்தபடியை இந்த த்விதீயாவிபக்தி தெரிவிக்கும். ஆக, பிராட்டி பெருமானைக் கைப்பிடித்தபின்பு மிதிலையை மிதித்தறியாளென்பது தேறிற்று. ஆழ்வாரும் *கடையறப் பாசங்கள் விட்டபின்னையன்றி அவனவை காண்கொடானே* என்றும், *பாதமடைவதன் பாசத்தாலே மற்றவன் பாசங்கள் முற்றவிட்டுக் கோதில் புகழ்க்கண்ணன் தன்னடிமேல்* என்றுமுள்ள பாசுரங்களினால் அதே நிலைமையைத் தமக்குத் தெரிவித்துக்கொண்டார்.

இங்ஙனே மற்றும் பல பொருத்தங்களுண்டு. அவை நமது திவ்யார்த்த தீபிகையில் விரிவாகக்காணத்தக்கன. இவையெல்லாம் ஆசார்யஹ்ருதய திவ்யார்த்தங்கள்.

# திவ்யப்ரபந்த ரஸாநுபவம்

பெருமாள் திருமொழியில் நான்காவது பதிகம். *ஊனேறுசெல்வம். *கொல்லி காவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்* என்றும் *ராஜா நம் குலசேகரம்* என்றும் சக்ரவர்த்தியாகச் சிறந்த பிறவிபெற்ற விவ்வாழ்வார் *வானாளுஞ்செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்* என்று உபயவிபூதிச் செல்வத்தையும் வெறுத்து *செம்பவளவாயான் திருவேங்கடமென்னும் எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமா வேனே* என்று திருவேங்கட மலையோடு ஸம்பந்தமுடைய திர்யக்ஸ்தாவரஜன்மங் களில் ஏதேனுமொன்றாகப் பெறுவேனாகவேணுமென்று இத்திருமொழி முழுவதனாலும் அருளிச்செய்திருப்பது ஜன்மோத்கர்ஷாபகர்ஷ விஷயத்தில் சிறந்த சாஸ்த்ரார்த்தத் தைத் தெளிவிப்பதாகும். இத்திருமொழியினுள்ளே புகுந்து சிறிது ரஸாநுபவம் செய்யக் குதுகலிக்கின்றேன்.

1. முதற்பாட்டில் *உடற்பிறவி யான்வேண்டேன்* என்று பிறவியை இகழ்ந் தவர்தாமே *குருகாய்ப்பிறப்பேனே* என்று பிறவியையே விரும்பினமையால், வேங்க டத்துக் கோனேரியில் பிறப்பது பிறப்பன்று, அது விரஜாநதியைச் சார்ந்து வைகுண் டத்தில் அப்ராக்ருதசரீரம்பூண்டு வாழ்வதோடொக்குமென்று ஆழ்வார் திருவுள்ளம் பற்றினரென்பது தெற்றென விளங்கும். [குருகாய்ப் பிறப்பேனே.] நாரை கொக்கு குருகு இவை ஒரே ஜாதி. நம்மாழ்வார் திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங் களில் *அஞ்சிறையமடநாராய்* *வைகல்பூங்கழிவாய்வந்துமேயுங் குருகினங்காள்* *எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்து இங்கினிதமரும் செங்காலமடநாராய்!* என்று முந்துற முன்னம் தூதுபோக விளித்தது இதனையேயாதலால் குருகாய்ப் பிறப்பேனே* என்று குருகான பிறவியிலே முதன் முன்னம் விருப்பங்காட்டினராழ்வார்.

2. [திருவேங்கடச்சுனையில் மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே] கீழ்ப் பாட்டில் 'குருகாய்ப்பிறப்பேனே' என்றவர் அப்பிறவியில் ஓர் குறை தோன்றி மீனும் பிறவியை வேண்டுகின்றாரிப்பாட்டில். குருகுக்கு இறகுகள் உண்டாகையாலே அது திருமலையைவிட்டுப் பறந்து வேற்றிடத்திற்குச் சென்றிடவுங்கூடும். திருமலையில் வாழவேணுமென்னுமாசை தமக்கு இப்போதிருப்பினும் குருகாய்ப் பிறந்தபோதும் இருக்குமென்ன முடியாதாதலால் அப்பிறவியில் குறை தோன்றிற்றென்க. மீனாய்ப் பிறந்தால் இடம்விட்டுப் பெயரமுடியாதன்றே. 'குருகாய்ப்பிறப்பேனே' என்றதையும் 'மீனாய்ப்பிறப்பேனே' என்றதையும் சேர்த்து நோக்குமிடத்து, மத்ஸ்யபக்ஷகமான குருகாய்ப்பிறத்தலோடு, அதற்கு இரையாகின்ற மீனாய்ப்பிறத்தலோடு இவர்க்கு வாசி யில்லை—திருமலையில் ஏதேனுமொரு பிறப்பை விரும்புபவராதலால் என்பது விளங்கும். எம்பெருமான் திருவுள்ளமுகந்துகொண்ட பல அவதாரங்களுள் முதலவதாரமாயிருத் தலும், நீர்மையுள்ளவிடத்தே செழித்து வளர்தலும், ஆதாரமான இடத்தைவிட்டுப் பிரிந்தால் உயிர்தரியாமையும் முதலியன மீனினிடமுள்ள குணவிசேஷங்கள். 'குரு காய்ப் பிறப்பேனே* என்றதுபோல் *மீனாய்ப்பிறப்பேனே* என்னாமல் *பிறக்கும் விதியுடையேனாவேனே* என்றது—இப்பொழுதே அங்கு யான் மீனாய்ப் பிறந்திடா விடினும் என்றைக்கேனும் ஏதேனுமொரு நல்வினையால் அங்கு எனக்கு நேருமென்னும் நிச்சய முண்டானாலும் போதுமென்ற கருத்தைக் காட்டும்.

3. [வேங்கடக்கோன்தான் உமிழும் பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறு வேனாவேனே.] கீழ்ப்பாட்டில் விரும்பிய மீன்பிறவியிலும் ஒரு குறை தோன்றிற்று; நீரைவிட்டுப் பிரிந்தால் உயிர் தரித்திருக்கமாட்டாதது மீன் பிறவி; சுனைவற்றிப்போனால் மீனுக்கு ஸத்தையில்லையாம்; ஆகவே அப்பிறவியும் வேண்டாவென்று தோன்றி, திருமலையப்பனுக்கு அந்தரங்ககிங்கரனாய் அவன் வாய்நீர் உமிழும் பொற்காளாஞ்சியை ஏந்திக்கொண்டு ஒருவராலும் தகையவொண்ணாதபடி துணிந்து விரைந்து உள்ளே புகுமவனும் பிறவி வாய்க்கவேணுமென்று அபேக்ஷிக்கிறார்.

4. [வேங்கடத்துச் செண்பகமாய் நிற்குந்திருவுடையேனாவேனே.] கீழ்ப் பாட்டில் விரும்பிய பொன்வட்டில் பிடிக்கும் கிங்கரனான பிறவியிலும் ஒரு குறை தோன்றிற்று; ஒரு கைங்கர்ய பரனாமளவில் அறிந்துமறியாதும் நிகழ்கின்ற குற்றங் காரணமாகக் கோவிலதிகாரிகள் சினங்கொண்டு 'இன்ன குற்றத்திற்காக உன்னைக் கைங்கரியத்தினின்றும் விலக்கிவிட்டோம், என்று கடிந்து விலக்கக்கூடும்; பொன் வட்டிலைக் களவு செய்ய ஆசை தோன்றி ராஜ தண்டனைக்கு உட்பட நேர்ந்தாலும் நேரும், என்று தோன்றிற்று. அதனால் அப்பிறவியிலுமாசையைவிட்டு, அத்தகைய குற்றத்திற்கு இடமற்ற ஒரு ஸ்தாவரப்பிறவியை விரும்புகிறார். *வானவர் வானவர் கோனொடுஞ் சிந்துபூமகிழுந் திருவேங்கடம்* என்றபடி பரமபதத்திலுள்ளார் புஷ்ப வர்ஷம் வர்ஷிக்குமிடமாதல்பற்றிப் புஷ்பமண்டபமெனப்படுகின்ற திருமலையிலே அப்பனுக்குப் புஷ்பகைங்கரியஞ் செய்வது விசேஷமாதலால் அக்கைங்கரியத்திற்கு உபயோகப்படுவதொரு பூமரமாக இருக்க வேண்டினாராயிற்று.

5. [எழில் வேங்கட மலைமேல் தம்பகமாய்நிற்குந் தவமுடையேனாவேனே.] கீழ்ப்பாட்டில் செண்பகப்பிறவியை விரும்பிய ஆழ்வார்க்கு புராணகதை யொன்று நினைவுக்கு வந்தது: "கற்பகக் காவு கருதிய காதலிக்கு, இப்பொழுது ஈவனென்று இந்திரன் காவினில், நிற்பனசெய்து நிலாத்திகழ் முற்றத்துள் உய்த்தவன்* என்றும் *மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான்* என்றும் ஆழ்வார்களருளிச் செய்கிறபடியே ஸத்யபாமைப் பிராட்டிக்காக தேவேந்திரனது சோலையினின்று கற்பகத் தரு பெயர்த்துக் கொண்டு போகப்பட்ட கதை; அங்ஙனம் யாரேனும் மஹாப்ரபுக்கள் திருமலைக்கு வந்து சண்பகமரத்தின் சதிரைநோக்கி தேவஸ்தானத்தில் நிதிக்குவை செலுத்திப் பெயர்த்துக்கொண்டு செல்லக்கூடுமோ! என்று சங்கித்து அப்பிறவியை இகழ்ந்து, இலை காய் கனி நிழல் ஒன்றுக்குமுதவாததொரு மலட்டுமரமாய் பிறக்கும் பிறவியை விரும்புகிறாராயிற்று. தம்பகம்—வீணே தோன்றி வளர்ந்து அங்கே தீந்து போவதொரு புதருமாம். (ஸ்தம்பக: — வடசொல்.)

6. [வேங்கடத்துள் அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தனாவேனே*] கீழ்ப்பாட்டில்—திருமலையில் தம்பகமாய் நிற்க ஆசைப்பட்ட ஆழ்வார் அப்பிறவியிலும் குறை கண்டார்; அரசாங்கத்தார் மலையிலுள்ள செடிசெட்டுகளை அடிக்கடி சோதிப் பவர்களாதலால் திடீரென்று அவர்கள் தம்பகத்தைக் களைந்தெறிந்திடக்கூடுமெனவும், அது தானே விரைவில் தீந்தொழியக்கூடுமெனவும் சிந்தித்தார்; அக்குறைக்கு இட மில்லாமே அத்திருமலையில் ஒருபாறையாக இருக்கப்பெறவேணுமென்று விரும்பினபடி

7. [ *திருவேங்கடமலைமேல் கானுருய்ப்பாயுங் கருத்துடையேனுவேனே.* ] கீழ்ப்பாட்டில், திருமலையில் ஒரு பெரும் பாறையாகவிருக்க விரும்பியதிலும் ஒரு குறை தோன்றிற்று; நூதன ஆலயங்களில் மூலபிம்பம் அமைக்கப் பெரும் பாறையைத் தேடி வருமவர்கள் இதைக்கொண்டு ஒரு பௌத்த விக்ரஹமடித்துப் போட்டால் என்செய்வதென்று சிந்தித்தார். அப்படி உடைத்துக்கொண்டு போவதற்கு இடமறும்படி திருமலையில் கானுருய்ப் பெருகவேணுமென்று பாரிக்கிருரிதில்.

8. [*திருவேங்கடமலைமேல் நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேனுவேனே.*] கீழ்ப்பாட்டில் கோலின கானுரும் பிறப்பிலும் ஒரு குறையுணர்ந்தார்; கானுறு எப்போதும் பெருகக்கூடியதன்றே; சில காலங்களில் வற்றிப்போமே; அப்போது திருமலையில் வாழ்ச்சி இழந்ததாமே என நினைத்தார். அங்ஙனமன்றி எப்போதும் ஒரு தன்மைத்தாகத் திருவேங்கடமுடையானை ஸேவிக்க வருகின்ற பாகவதர்களின் ஸ்ரீபாததூளிபடும்படி வழியாயிருக்கப் பெறவேணுமென்று பாரிக்கிருரிதில்.

9. [*படியாய்க்கிடந்துன் பவளவாய் காண்பேனே.*] வழியாய்க் கிடப்பதிலும் ஒரு குறை தோன்றிற்று. திருமலைக்குப் பல வழிகளுண்டு, சந்திரகிரிவழி அணித்தென்று அவ்வழியே போகக்கூடும்; இப்போது வேறுவழியும் ஏற்பட்டுவிட்டதே. மேலும் வழியென்பது விலகிநிற்பதாதலாலும் அதையும்விட்டு, திருமலையப்பனுடைய திருவருள் நோக்கம் பதியுமாறு அவனது கண்முகப்பிலே படியாயிருந்து, அதில் சைதன்யமும் குடிபுகுந்து பவளவாய்காணப் பெறுவேனுகவேணுமென்று பாரிக்கிருரிதில். *குலசேகரப்படி யென்று இற்றைக்கும் வழங்குவர்.

10. [எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே.] நாம் கருங்கற்படியாய்க்கிடந்தால் திருவேங்கடமுடையானுடைய செல்வச் சிறப்புக்கு ஏற்ப அதன்மேல் ஸ்வர்ணகவச ஆவரணமேற்பட்டால் படியாகியும் பயனில்லையாமென்று கருதி, 'நானுமறியாமே அவன்றானுமறியாமே திருமலையில் ஏதேனுமொரு பிறப்பாகுக' என்று சாதுரியமாகப் பேசிப் பதிகத்தைத் தலைக்கட்டினுராயிற்று. ... ... *

# ஸ்ரீ க்ருஷ்ண திவ்யமஹிஷிகளைப்பற்றி வினு விடை

வினு—திவ்யப்ரபந்தங்களில், ஸ்ரீக்ருஷ்ணதிவ்ய மஹிஷிகளில் யார்யாரைப் பற்றி ப்ரஸ்தாவம் வந்திருக்கின்றது? அதிலும் அதிகமான ப்ரஸ்தாவம் யாரைப்பற்றி?

விடை—நப்பின்னைப் பிராட்டி, ருக்மிணிப்பிராட்டி, ஸத்யபாமை ஆகிய இம்மூவரைப்பற்றி ப்ரஸ்தாவமுள்ளது. நப்பின்னையைப் பற்றின பாசுரங்கள் எண்ணிறந்தவை; ருக்மிணிப் பிராட்டியைப் பற்றி ஐந்தாறிடங்கள் மட்டுமே. ஸத்யபாமை ஒரு கதையின் மூலமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிருளே யொழிய, திருநாமத்தையிட்டுத் தெரிவிக்கப்பட வில்லை.

வினு—ஸத்யபாமையைத் தெரிவிக்கின்ற கதை யாது? அந்தக் கதை யுள்ள பாசுரங்களையுஞ் சொல்லு கேட்போம்.

விடை—பாரிஜாதாபஹரணக் கதை ப்ரஸித்தமாயிற்றே. (அதாவது) எம்பெருமான் வராஹாவதாரஞ் செய்து பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்த பொழுது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமி தேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும் அஸமயத்திற் சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை பூண்டவனுமான நரக னென்பவன் ப்ராக்ஜோதிஷ மென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகல ப்ராணி களையும் நலிந்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகள் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக்கொண்டுபோய்த் தான் மணம்புணர்வதாகக்கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்நபர்வ தத்தையும் தேவர்தாயான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்து போனது மன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக்கொண்டுபோகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனைவரவழைத்துப் பூமிதேவியின் அம்சமான ஸத்யபாமையுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தையடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவ னது மந்திரியான முரன் முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுர னையும் அறுத்துத் தள்ளி அழித்து அவன் பலதிசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப் படுத்தியிருந்த பதினாறுயிரத்தொருநூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு அந்த நரக னால் முன்பு கவரப்பட்ட (இந்திரன் தாயான அதிதிதேவியின்) குண்டலங்களை அவ் வதிதிதேவிக்குக் கொடுக்கும் பொருட்டு ஸத்யபாமையுடனே கருடனது தோள்மே லேறிக்கொண்டு தேவலோகத்துக்குச் செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப் பெண் ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லை யாதலின், அவள் அதனைக் கண்டு விருப்புற்றவளாய் நாதனை நோக்கி "பிராண நாதனே! இந்த பாரிஜாததருவை த்வாரகைக்குக் கொண்டு போகவேண்டும்" என்றதைக் கண்ணபிரான் திருச்செவி சார்த்தி உடனே அந்த விருக்ஷத்தை வேரோடு பெயர்த்துக் கருடன் தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப் போர் செய்த இந்திரனை ஸகல தேவஸைந்யங்களுடன் சங்கநாதத்தினாலே பங்கப்படுத்தி, பின்பு பாரிஜாத மரத்தை த்வாரகைக்குக் கொண்டுவந்து ஸத்யபாமைவீட்டுப் புழைக் கடைத் தோட்டத்தில் நாட்டியருளினன் என்பது வரலாறு. இதனை, *கற்பகக் காவு கருதிய காதலிக்கு, இப்பொழுது ஈவனென்று இந்திரன் காவினில் நிற்பனசெய்து நிலாத்திகழ் முற்றத்துள்: உய்த்தவன்* என்னுதன் தேவிக்கு அன்றின்பப்பூவீயாதாள் தன்னுதன் காணவே தண்பூமரத்தினை, வன்னுதப்புள்ளால் வலியப்பறித்திட்ட என்னு தன்* என்றிவை முதலிய பாசுரங்களினால் பெரியாழ்வாரும், *மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய், வண்துவரை நட்டானை* மட்டவிழுங்குழலிக்கா வானோர்காவில் மரங் கொணர்ந்தான்* என்றிவைமுதலான பாசுரங்களினால் திருமங்கையாழ்வாரும் அநு ஸந்தித்துள்ளார்கள்.

வினா—ருக்மிணிப் பிராட்டியைப் பற்றின வரலாற்றை ஆழ்வார்கள் அநுஸந்தித் திருப்பதுண்டா?

விடை—நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியும் நன்றாக அநுஸந்தித்திருக்கிறார்கள். திருவாய்மொழியில், திருவாறன்விளைப் பதிகத்தில்

*அன்றங்கமர்வென்று உருப்பிணிநங்கை யணிநெடுந்தோள் புணர்ந்தான்* என்று நம்மாழ்வாரும் *உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக்கொண்டு.....தலையைச்சிரைத்திட்டான் வன்மையைப்பாடிப்பற* உருப்பிணிநங்கைதன்னை மீட்பான் தொடர்ந்தோடிச்சென்ற, உருப்பனையோட்டிக் கொண்டிட்டு உறைத்திட்ட உறைப்பன்மலை* என்று பெரியாழ்வாரும், *கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்தபெண்ணாளன்* என்று ஆண்டாளும் பணித்துள்ளார்கள்.

வினு;— நப்பின்னைப்பிராட்டியைப்பற்றி மட்டும் எண்ணிறந்த பாசுரங்கள் அவதரித்திருப்பதற்குக் காரணமென்ன?

விடை;— கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளினபோது எருதேழடர்த்து மணம் புணர்ந்த தேவியாதலாலும், அத்தைமகளாகையாலும் கண்ணனுக்கு விசேஷித்து அன்புக்கிலக்கா யிருந்தவ ளென்பது பற்றியே ஆழ்வார்கள் அவளை அடிக்கடி வாய்வெருவுகின்றனர். பெரியாழ்வார் திருவாக்கிலும் திருமகளார் திருவாக்கிலுமே நப்பின்னையென்னுந்திருநாமம் காணலாகும். பின்னையென்பதே பெரும்பான்மை; ஸ்ரீமஹாலக்ஷ்மிக்குப் பிற்பட்டவள் என்று பொருள் கூறுவாருமுளர். (ந) என்பது உயர்வு குறிக்கும் தமிழுபசர்க்கம். நக்கீரர் என்றதிற்போல.

வினு;— நப்பின்னைக்கு வடமொழித் திருநாமம் ஒன்று மில்லையோ?

விடை;— ஏனில்லை? பட்டர்ஸாதித்த திருப்பாவைத்தனியன் *நீலாதுங்கஸ்தநகிரி தடீஸுப்தம்* என்றுதானே தொடங்குகிறது. *நீளா குலேந ஸத்ருசீ கில ருக்மிணீ ச*என்று கூரத்தாழ்வானும் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் ஸாதித்துள்ளார். தேசிகன் யாதவாப்புதயத்தில் நான்காம் ஸர்க்கத்தில் இவளது சரிதையை விரித்துரைத்திருக்கின்றார். ஒருநுட்பம் பெரியாரிடம் கேட்டிருக்கிறேன். (அதாவது) ஆழ்வார்கள் ஸ்ரீதேவி பூதேவி நீளா தேவிகள் மூவரையும் சேர்த்துச் சொல்லுமிடங்களிலெங்கும் * தழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும்திருவும்* உடனமர்காதல்மகளிர் திருமகள் மண்மகளாயர் மடமகள்* கூந்தல்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன்* திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால்* என்றிவை முதலான பல பாசுரங்களில் நீளா தேவியை ஆயர்மடமகளென்றே குறிப்பிடுகின்றார்கள். அந்த ஆய்மகள் நப்பின்னைப்பிராட்டிதானென்பதை *பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல்!* என்கிற திருவாய்மொழிப் பாசுரம் வியாக்கியானித்துவிட்டது.

வினு:— நப்பின்னைப் பிராட்டியின் கதை வடமொழிப் புராணங்களுள் எதில் கூறப்பட்டுள்ளது?

விடை:— யாதவாப்யுதய வியாக்கியானத்தில் அப்பயதீக்ஷிதர் இவளது வரலாறு ஹரிவம்ஶத்திலுள்ளதாக எடுத்துக்காட்டியுள்ளார். ஆனால் அச்சிட்டிருக்கும் ஹரிவம்ஶத்தில் அது காணக்கிடைக்கவில்லை. ப்ரஹ்ம வைவர்த்த புராணத்திலிருப்பதாகச் சிலர் சொல்லுகிறார்கள்.

வினு—ருக்மிணீஸத்யபாமைகளையும் நப்பின்னையையும்போலே ஆண்டாளும் கண்ணபிரானுக்கு ஒரு தேவிதானே; இவளைப்பற்றியும் ஆழ்வார்கள் அருளிச்செய்திருக்கிறார்களோ?

விடை:— அந்தத் தேவிகள் விபவாவதார தேவிகள்; ஆண்டாள் அங்ஙன மல்லள்; அர்ச்சாவதாரதேவி யிவள். பெரியாழ்வார் திருமகளாக அவதரித்து விபவாவ தார அநுபவங்களை யாசைப்பட்டு அரங்கநாதனை அழகிய மணவாளனை மணம் புணர்ந்தாள். ஆனது பற்றியே இவளுடைய நாதனுக்கு ரங்கமன்னாரென்று திருநாமம். ரங்கன் என்பது அர்ச்சைத்திருநாமம்; மன்னார் என்பது விபவத்திருநாமம். *வண்துவரா பதிமன்னனன்றோ. ... ... ... (தொடரும்)

# ஸ்ரீமான் K. ரகுபதிராவின் விதண்டாவாதம்

சென்றமாதத்து ஸ்ரீ ராமாநுஜனிதழில் (353ல்) ஷை ரகுபதிராவ் அவர்களுக்கு விடையாக நாம் எழுதி வெளியிட்டிருந்த கட்டுரையை ஆஸ்திக ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனைவரும் ஊன்றி வாசித்திருப்பர்கள். மேன்மைதங்கிய (ஓய்வு பெற்ற) சென்னை உயர் நீதிபதி உயர்திரு N. கிருஷ்ணஸாமி ரெட்டியாரவர்கள் அந்த நமது கட்டுரையை வாசித்து ‘பொருத்தமான இவ்வளவு ஸமாதானம் போதுமென்று கருதுகின்றேன்’ என்று நிருபம் அருளியுள்ளார்கள். இதே கருத்தில் பல மஹான்களின் கடிதங்கள் கிடைத்துள்ளன. ஷை ராவ்ஜீ அவர்கள் தமது நெஞ்சை வஞ்சித்து ஸமாதானமடையாதவர்போல் ஏதோ தலைகாலில்லாமல் மீண்டும் நமக்கு ஆங்கிலத்திலேயே நீண்டதோர் கடிதமனுப்பியுள்ளார்; பொதுமக்கள் இங்குக் கவனிக்கவேண்டும். முதலில் அந்த ராவ்ஜீ தம்முடைய தூய்மையற்ற வாசகங்கள் கொண்ட (ஆங்கிலக்) கடிதத்தை நமக்கு அனுப்பினர். அதை நாம் பொருள்படுத்தி யிருக்கவேண்டியதே யில்லை. ஆனாலும் நாம் அதற்கு விரிவாகவே விடையளித்து நமது பத்திரிகையில் உலகமறிய வெளியிட்டோம். அதற்குமேல் அவர்க்கு விவக்ஷிதமிருந்தால் ஒரு பத்திரிகையில் உலகமறிய வெளியிட்டிருக்கவேண்டும். இப்போது அவர் தாமே யெழுதுகிறார். ‘நமக்குத் தமிழில் பரிசயம் போதாது’ என்று. நமக்கு ஆங்கிலத்தில் பரிசயம் மிகச் சிறிது என்பதையும் அவர் அறிந்துள்ளார். அவருடைய ஆங்கிலக் கடிதத்தின் கருத்தை நாம் ஆங்கிலம் வல்லவர்களைக்கொண்டு (தமிழில்) எழுதுவித்து அதையும் பத்திரிகையில்வெளியிட்டே நம்முடையவிடையை வெளியிட்டிருக்கிறோம். அப்படியே இவரும் செய்திருக்கவேண்டும். ஸம்பந்தமற்ற விஷயங்களையே அவர் தாம் எழுதி விட்டு, நம்முடைய விடை பொருத்தமற்றது என்கிறார்.

மேன்மைதங்கிய தமிழ்நாட்டு கவர்னர்முதலான கனவான்களை இவர் (ராவ்) தமதுகடிதத்தில் குறிப்பிட்டிருப்பதால் இவருடைய கலக்கங்களை நாம் சிறிதும் பொருள் படுத்தாமல், இவர்க்கு பதிலெழுதுவது என்கிற முறையிலன்றிக்கே, மற்ற ஆசாரியர் களிற்காட்டிலும் ஸ்ரீராமாநுஜர்க்கு அஸாதாரணமாகவுள்ள பெருமை இன்னதென்பதை உள்ளபடி நாலே வரியில் தெரிவிக்கின்றோம். ஆசார்ய ஹ்ருதயத்தில் *தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடிபணிந்தவர்க்குமே இவை யுள்ளது* என்ற சூர்ணைக்கு மணவாளமாமுனிகள் இட்டருளின வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை ஸேவித்துத் தெளிவது. அர்த்தவிசேஷங்களைக் கண்டபடி தெருவில் வாரி யிறைக்கவில்லை, அநதிகாரிகளுக்கு உபதேசிக்கவுமில்லை. *முன்னோர்களைக்காட்டிலும் ஸ்ரீராமாநுஜர்க்கு என்ன ஏற்றமென்றால், அவர்கள் ஆஸ்தையுடையவர்களிலும் ஒருவரிருவர்க்கல்லது

இரங்கி உபதேசிக்கவில்லை. ஸ்ரீராமாநுஜரோ வென்னில், ஆசையுடையாரை இழந்தவர்களாக்கக்கூடாதென்கிற பரமகருணையாலே ஆசையுடையோர்க்கெல்லாம் தாம் உபதேசித்தும் தமர்களைக்கொண்டு உபதேசிப்பித்தும் போந்தார். சிதம்பரத்தருகே வீரநாராயணபுரத்தேரி எழுபத்துநான்கு மதகுகளாலேபெருகி ஸஸ்யங்களைவாழ்விக்குமாபோலே ஸ்வாமி ராமாநுஜர் தாமும் எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளை ப்ரதிஷ்டிப்பித்து அவ்வாசிரியர்களின் சிஷ்யப்ரசிஷ்ய பரம்பரைவழியாக ஆஸ்திகர்களும் ஆசையுடையவர்களுமான அதிகாரிகளின் உஜ்ஜீவனத்திற்கு மூலகந்தமாக எழுந்தருளியிருந்ததே அவர்க்கு அஸாதாரணமானபெருமையாகும். ஸ்ரீராமாநுஜர்க்குத் தனியனிட்டவர் கூரத்தாழ்வான்; அவர் அந்தத் தனியனிலே (*அஸ்மத் குரோர்பகவதோஸ்ய) தயைகஸிந்தோ: என்றிட்டது ஸாரதமம். இந்த விசேஷணப் பெருமை ஸ்ரீ ராமாநுஜர்க்கு முற்பட்ட ஆசாரியர்கட்கு அமைய வழியில்லையே. ... *

## இதைச் சிரிக்காமல் வாசிக்கவேணும்

ஓர் ஊரில் ஒரு கவிசிரோமணி யிருந்தார் அவருடைய வயது 93. அவ்வூரில் யார் பரமபதித்தாலும் சரமச்லோகம் பண்ணித்தரும்படி அவரையே நாடுவர்கள். சரமச்லோகங்களில் பரமபதித்தவருடைய கோத்ர நாமதேயங்களைக் குறிப்பிடவேணுமல்லவா? ரங்காசாரியர், ராகவாசாரியர், வரதாசாரியர், வேங்கடாசாரியர்.........என்றித்தகைய ஒற்றைப் பெயர்களாயிருந்தால் எளிதாக சுலோகமியற்றுவர்; வெங்கட ராகவாசாரியர், திருவேங்கடராமாநுஜாசாரியர்...என்றிப்படிப்பட்ட இரட்டைப் பெயர்களாயிருந்தால் மிகவும் சிரமப்படுவர்; *நிரஸ்தபாதபே தேசே ஏரண்டோபி த்ருமாயதே* என்னும்படியாக அவ்வூருக்கு அவர் ப்ரபலபண்டிதராகையாலே, இரட்டைப் பெயர்களை சிரமப்பட்டும் சுலோகத்தில் சேர்க்கமுடியாமற்போனால் வ்ருத்தபங்கத்தைக் கணிசியாமல் கைபோனபடியெல்லாம் சுலோகமெழுதிக் கொடுத்துவிடுவர். ஒருநாள் அவருக்குத் தோன்றியது — பிறந்த குழந்தைகளுக்கு ஒரு சுப முஹூர்த்தத்தில் நாமகரணம் செய்கிறார்களல்லவா? அப்போதே நாம் அங்கே போயிருந்து பெரிய பெயர் வைக்கவொட்டாமல் சிறிய பெயரையே இடும்படி செய்துவிட்டோமானால் சரமச்லோகமியற்றுவதில் நமக்குச் சிறிதும் கிலேசமேற்படாது என்று தோன்றியது. நெடுநாள் ஸந்ததியில்லாமல் அருந்தவப்பயனாக ஒருதனிகர்க்கு ஆண்குழந்தை பிறந்து நாமகரண நன்னாளும் ப்ராப்தமாயிற்று. அழைத்தோ அழையாமலோ இந்தக்கிழவர் அவ்விடம் போய்ச் சேர்ந்தார். குழந்தைக்குப் பெயரிட்டாயிற்று. நேத்ரச்ரோத்ரபாடவமில்லாத இக்கிழவர் குழந்தையின் தகப்பனாரை யழைத்து ‘சிசுவுக்கு என்ன பெயரிட்டீர்கள்?’ என வினவினார். பெரியவர் கேட்கிறாரேயென்று அவர் பயபக்தியோடு அருகேவந்து ‘இரண்டுமூன்று பெரியவர்களின் குலக்கொழுந்தாகப் பிறந்த குழந்தையாகையாலே வேங்கடநரஸிம்ஹரகுராமக்ருஷ்ணன் என்று பெயரிட்டோம்’ என்றார். கிழவர் அது கேட்டவுடனே ‘ஐயையோ! நாளைக்கு என் தாலி அறுந்து போகுமே! இவ்வளவு நீண்ட பெயர் சரமச்லோகத்தில் கூடுவது வெகு ச்ரமமாச்சுதே! (வெங்கட நரஸிம்ஹ) என்கிற பெயர் கூடுவதே மஹாப்ரயாஸம்; அதற்குமேல் ரகுராமக்ருஷ்ணனும் சேர்ந்துவிட்டால் நான் தத்தளிக்கவேண்டியதேயாகுமே—செத்து சுண்ணாம்பாய் விடுவேனே! கொஞ்சம் தயவுபண்ணி இப்பெரிய பெயரைமாற்றி ரங்கன் சிங்கன்என்று வைக்கமுடியாதா? சிறிது யோஜித்துப்பாருங்கள்’ என்கிறார். மன்றாடுகிறார்.

வாசகர்களே! அதற்குமேல் அந்த கோஷ்டியில் என்ன நடந்திருக்குமென் பதை நீங்களே ஆலோசித்துப் பார்த்துக்கொள்ள வேண்டியது. அந்தக் கிழவர்க்கு அன்றே சரமச்லோகமாகியிருக்கும். சரமச்லோகமியற்றுகிற சிரமம் அவர்க்கு அன்றோடு தொலைந்திருக்கும். ... ... ... ... ... *

## காஞ்சியில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம்

ஸ்ரீமான் உவே. P. B. S. ராமானுஜாசாரியர் (ப்ர. கண்ணன் ஸ்வாமி யென்று ப்ரஸித்தர்) நிகழும் கார்த்திகை மாதத்தில் திருவாதிரை நன்னாளில் அறுபதாண்டு நிறைவு மஹோத்ஸவம் விசேஷவைபவமாகக் கொண்டாடப்பெற்றார். இவர் பிரதிவாதி பயங்கர வம்ஶஸ்தர். திருவரங்கம் பெரியகோயிலில் தீர்த்தமரியாதை பஹுமானங்கள் உள்ளவர். பரம ஶாந்தர், பரமஸாத்விகர் ஸ்ரீவசநபூஷண ஆசார்யஹ்ருதயாதிகளில் நல்ல உபஸ்திதியுடைய பகவத்விஷயாதிகாரி. தமிழ் இலக்கண இலக்கியப் பேராசிரியர். இவ்வூரிலேயே ஆண்டர்ஸன் ஸ்கூலில் முப்பதாண்டு ஆசிரியராயிருந்து சென்றவாண்டு முடிவில் ஓய்வு பெற்றவர். தம்மையேயொக்க அருள் செய்யப்பெற்ற இரு திருக்குமாரர்களையும் ஒரு திருக்குமாரியையும் உடையவர். ஐந்துநாள் அருளிச்செயல் ஸேவையுடனும் வேதபாராயணத்துடனும் சீரும் சிறப்பும் பொலிய இம்மஹோத்ஸவம் நடைபெற்றது. *வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே* தழைநல்லவின்பம் தலைப்பெய்து எங்குந்தழைக்கவே.* ... *

கடிதம் 1 —வில்லிவாக்கம்

### ஸ்ரீ ஸௌம்ய தாமோதரப் பெருமாளும் — மணவாளமாமுனிகளும்

"மாயனை மன்னு வடமதுரை மைந்தனை-தாமோதரனை" என்று ஆண்டாளால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட தாமோதரன் சென்னையை அடுத்த வில்லிவாக்கம் க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டருளுவது அனைவரும்அறிந்ததே. ஷ 'ஸ்ரீஸௌம்ய தாமோதரப் பெருமாள் ஸன்னிதியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமணவாளமாமுனிகளுக்குத் திருவவதார உத்ஸவம் வெகுவிமரிசையாக நடத்தப்பட்டு சாற்றுமறை நிறைவேறியது 5-11-77 முதலாக 14-11-77 வரை பத்து நாட்களும் விசேஷ அலங்கார திருமஞ்சனம் அருளிச்செயல், ஸ்தோத்ரபாட கோஷ்டி நடந்தது. மாலை வேளையில் பத்து நாளும் மாமுனிகள் ஸ்தோத்ரபாட கோஷ்டியுடன் பெருமாள், தாயார், ஸ்ரீராமர், கண்ணன், ஆண்டாள், ஆழ்வார், உடையவர் இவர்களை மங்களாசாஸனம் செய்ததும் ஸ்தோத்ரபாட கோஷ்டி உடையவர் ஸன்னிதியில் சாற்றுமறையானது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. கடைசி 5 நாட்கள், மாமுனிகள் ஹம்ஸ வாகனம் சேஷவாஹனம், புஷ்ப பல்லக்கு இவற்றில் மாடவீதி புறப்பாடு கண்டருளினர். இவ்விடத்தில் ஷ உத்ஸவ வைபவங்களுக்கு மூலகாரணமாக டாக்டர் K. ரங்கஸ்வாமி அய்யங்கார் பொறுப்பேற்று நடத்திவருவது குறிப்பிடத்தக்கது. எல்லாஉத்ஸவங்களும் இவ்விடத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் 'ஸ்ரீமணவாளமாமுனிகள் சபா'மூலம் நடத்தப் பெறுகின்றன. மேற்படி 'ஸ்ரீ மணவாளமாமுனிகள் கைங்கர்ய சபா' மேன்மேலும் விருத்தியடைந்து மாமுனிகளின் கைங்கர்யத்தைச் சிறப்பாக நடத்திப்போர ஸ்வாமியினுடைய மங்களாசாஸனத்தைப் பிரார்த்தித்து நிற்கிறேன்.

வேணும் தெண்டன் ஸமர்ப்பித்த விண்ணப்பம்,

தி. அ. வேங்கடவரததாஸன். 6—11—71

**கடிதம் 2** **திருநாங்கூரில் ஓர் அரிய பெரிய நிகழ்ச்சி**

லோக க்ஷேமார்த்தமாக, ஸத்ய ஸங்கல்பரும் உலகம் நிறைந்த புகழாளருமான ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி பாரத தேசம் முழுவதும் நடத்திக்கொண்டுவரும் ஸ்வாத்யாயஜ்ஞானயஜ்ஞங்கள் கடந்தமாதம் முதற்கொண்டு திருநாங்கூர் திருப்பதியில் ஆரம்பமாயின. முதலில் திருமணிமாடக் கோயில், அண்ணன் கோயில் (திருவெள்ளக்குளம்), புருஷோத்தமன் ஸந்நிதி ஆகிய திவ்ய தேசங்களிலும் 37 முதல் 39வது யஜ்ஞங்கள்வரை நடைபெற்றன 40வது ஸ்வாத்யாய யஜ்ஞம் திருப்பார்த்தன்பள்ளி திருப்பதியில் 20—10—77 முதல் 26—10—77 வரையில் ஏழுநாட்கள் வெகு அத்புதமாய் நடந்தது.

தினமும் காலையிலும், மாலையிலும் யஜ்ஞ ஹோமாதிகளும், திவ்யப்ரபந்த வேத கோஷ்டிகளும், ஸஹஸ்ரநாம அர்ச்சனையும் வெகு விமரிசையாக நடந்தன. இருவேளையும் புருஷஸூக்த ஸ்ரீஸூக்த ஹோமங்கள் ஐந்து ரித்விக்குகளைக் கொண்டு நடத்தப்பட்டது.

கடைசிநாளன்று (26—10—77) யஜ்ஞ பூர்ணாஹுதி நடைபெற்று வேத திவ்ய ப்ரபந்த சாத்துமறை விசேஷமாக நடந்தது. மாலையில் ஸ்ரீதாமரையாள் கேள்வனுக்கும் ஸ்ரீசெங்கமல நாச்சியருக்கும் திருக்கல்யாண மஹோத்ஸவம் ஸ்ரீஜீயர் ஸ்வாமியால் அத்யத்புதமாய் கொண்டாடப்பட்டது. இதுசமயம் ஸ்ரீஜீயர் ஸ்வாமியும் கோஷ்டியை மங்களாசாஸனம் செய்தார்.

*பாருள் நல்ல மறையோர் நாங்கைப் பார்த்தன் பள்ளிச் செங்கண்மால் அருள் அவனடியாரனைவருக்கும் ப்ராப்தமாக ஸ்ரீஜீயர் ஸ்வாமி அனுக்ரஹித்தருளினர். அவனருள் பெற்ற அனைவரும் ஏர்கொள் நல்ல வைகுந்தத்துள் இன்பநாளுமெய்துவார் எனும் திருமங்கை மன்னன் திவ்யஸூக்தி இம்மண்ணுலகில் யாவரும் பெற ஹேதுவாய் அமைந்தது. யஜ்ஞமும் அதன் கர்த்தாவான ஸ்ரீ ஜீயர் ஸ்வாமியும் பல்லாண்டு பல்லாண்டு நம்மிடையே எழுந்தருளியிருக்க நாமும் "நேசனை" நினைத்து அஞ்சலி செய்கின்றோம். தாஸன் **தேவராஜன்**, சென்னை.

**கடிதம் 3** ***ஸ்ரீ உ. வே A. ராமாநுஜாசாரியார்***, B. A., Saidapet
நெ. 60, பெருமாள் ஸந்நிதி வீதி.

அடியேன் நம்பிள்ளை யுத்ஸவம் ஸேவிக்க 25-11-1977ல் காஞ்சீபுரத்திற்குப் போயிருந்தேன். அப்போது நம்பிள்ளை ஸந்நிதியில் எழுந்தருளியிருந்த நம் P B A. ஸ்வாமியை ஸேவிக்கையில் சென்னை ஸ்ரீ ரகுபதிராவ்அவர்கள் எழுதிய 6வது ஆங்கிலக்கடிதம் நம் ஸ்வாமிக்குக் கிடைத்த ஸமயம் அடியேன் அருகிலிருந்தபடியால் அவர் உத்தரவினால் அதை வாசித்துச் சுருக்கமாகத் தமிழில் மொழிபெயர்த்தும் எழுதித் தந்தேன். ராவ்ஜீ அவர்களின் மருள் பலவிஷயங்களில் வெகு ஆச்சரியமா யிருக்கிறது. சிஷ்யனைப் பரீக்ஷியாமல் எதையும் உபதேசிப்பது தவறு என்பது அவரது முதல் வாதம். பகவத்கீதையில் கீதாசார்யன் இப்படித்தான் கட்டளையிட்டானும். இருக்கட்டும். அர்ஜுனன் யுத்த ஸமயத்தில் ஏதோ ஸந்தேகம்வர, அதைத் தீர்த்து வைக்கவேணுமென்று வேண்ட, அவ்வளவோடு நிற்காமல் அவன் கேளாத வேதாந்த விசாரங்களையெல்லாம் (பூய ஏவ மஹாபாஹோ! ச்ருணு மே பரமம் வச:) என்றெல்லாம் பீடிகையிட்டு அக்கண்ணன் தான் வலிய ஏன் உபதேசித்தான்?

கவர்னர் ராஜரஹஸ்யங்களையெல்லாம் அநதிகாரிகளுக்கு உபதேசிக்கட்டுமே என்றும் அநதிகாரிகளையும் வேலையிலமர்த்தி அவர்கள் வேலையை யெதிர்பாராமலே சம்பளம் தரட்டுமே என்றும் இப்படியெல்லாம் (ராவ்ஜீ) விதண்டாவாதம் செய்கிறார். கேளுங்கள்—லோகவ்யவஹாரமென்பது வேறு. அவரவர்கள் ஆத்மோத்தாரத்திற்கு வழிசெய்வது வேறுவிஷயம். ஒருவர் எந்த விதமாகவாவது நற்கதி யடைந்தால் அதனால் பிறர்களுக்கு யாதொரு தீங்குமில்லை. ராஜரஹஸ்யங்களை அநதிகாரிகளுக்கு வெளியிட்டால் உலகுக்கன்றோ தீங்கு விளையும்? அநதிகாரிகளுக்கு வேலை தருவதாலும் இப்படியேதான் லோக வ்யவஹாரம் கெட்டுப்போம்—ஆகையால் இவை இரண்டையும் ஒப்பிடுவது ஸரியல்ல.

ராவ்ஜீ எம்பெருமானுக்கோ ஆசாரியர்களுக்கோ அல்லது மற்றும் யாராவது பெரியோர்களுக்கோ தயை என்கிற குணம் ஒன்றிருக்கவேணுமென்றோ இருக்குமென்றோ இசைகிறாரா, இல்லையா? என்பது முதலில் தெரியவேணும். எல்லா வ்யவஹாரங்களும் நூல்வரம்பின்படியே நடக்கவேணுமென்கிறவர்கள் பக்ஷத்தில் தயைக்கு இடமே கிடையாது. நூல் வரம்பை மீறிப் பெருகுமதன்றோ தயை? இதற்கு மாறாக இவருடைய ஸித்தாந்தமானால் இதற்கு நாம் பதில் என்ன சொல்லவிருக்கிறது? தயை என்கிற வஸ்துவே கிடையாதென்றும், இருந்தால் அது தீயகுணமேயன்றி நற்குணமன்றென்றும் இவர் ப்ரசாரம் செய்துவரலாம். யாரையும் தம் வாயால் தயாளுவென்று கொண்டாடாமலு மிருக்கவேணுமிவர். இவரும் யார்விஷயத்திலும் தயைகாட்டக்கூடாது.

வேறொரு வேடிக்கை—இவர் எழுதுகிறார், நம் P B A ஸ்வாமி வேத வேதாந்த வைஜயந்தீ பாடசாலைத் தலைவர் என்கிற விதமட்டுமறிந்து, மற்றொன்றும் அறியாதவராய் பாடசாலையில் மாணவர்களுக்குப் பாடம் கற்பியாமலே, பரீக்ஷை வைக்காமலே அவர்களுக்கு தேறினதாக ஸர்டிபிகேட் கொடுத்து தாமும் ஸர்க்காரிலிருந்து சம்பளம் வாங்கலாமே என்று எழுதுகிறார். நம் ஸ்வாமி விஷயத்தை உலகமெல்லாமறிந்திருக்க இவர் அறியவில்லை யந்தோ! நமது ஸ்வாமி ஸர்க்கார் சம்பளம் பெறும் ப்ரின்ஸிபால் என்று அந்தோ இவர் மருண்டுவிட்டார். 1913ம் வருஷத்தில் ஸ்வாமி தாமே பாடசாலையை ஸ்தாபித்து தாம் சிரமப்பட்டு க்ரந்தங்கள் எழுதியும், உபந்யாஸங்கள் செய்தும் ஈட்டிய பொருளைக்கொண்டு அப்பாடசாலையை நடத்தி வித்யார்த்திகளுக்கும் உபாத்யாயர்களுக்கும் தாம் ஸம்பாவனைகொடுத்து தார்மிகக் கலைகளைக் கற்பித்து திவ்யதேச மங்களாசாஸநத்திற்கும் கைங்கர்யத்திற்கும் அதிகாரிகளைத் திரட்டுமவர் நம் ஸ்வாமி. இவர்க்கு எந்த ஸர்க்காரும் சம்பளம் தந்ததில்லை. இவர் பெருமையைப் பார்த்து ஸர்க்காரும் பல பெரியோர்களும் ஸன்மானித்து வருகிறார்கள். இப்படியிருக்கிற விஷயத்தையறிய பாத்கியமில்லாமல் ராவ்ஜீ ஏதோ எழுதுவதற்கெல்லாம் இனியாவது நம் ஸ்வாமி பதில் எழுதாமலிருப்பதுதான் நன்று என்று அடியேன் விண்ணப்பிக்க விரும்புகிறேன். ... ✽

## சென்னைத் திருப்பாவை யுபந்யாஸம்

நமது பத்ராதிபஸ்வாமியின் திருப்பாவை யுபந்யாஸம் வழக்கம்போல் சென்னை மாநகரில் உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் சாரிடியில் 15—12—77 வியாழக்கிழமை முதல் தினந்தோறும் மாலை 6 மணி தொடங்கி நடைபெறும். அதனால் 14-12-77 முதல் 12-1-78 வரைக்கும் ஸ்வாமியின் விலாஸம் கீழ்க்கண்டவாறு:—

Sri P. B. ANNANGARACHARYA SWAMI,
VUPPATTOOR ALWAR CHETTY'S RAMANUJAKOOTAM
48, Govindappa Naicken St, Madras-600001.

# 6. த்வய மந்த்ரத்தின் ஸாரப்பொருள்

முமுக்ஷுக்களுக்குத் திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களும் உபாதேயமானாலும்: *த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதா ஏவம் வக்தா யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ* என்று ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானார்க்கு நியமித்தருளினபடிக்குச் சேரவும், மணவாளமாமுனிகளின் திநசர்யையில் * மந்த்ரரத்நாநுஸந்தாந ஸந்ததஸ்புரிதாதரம், ததர்த்தத்வ நிர்ணய ஸந்நத்தபுலகோத்கயம் * என்று பணித்ததற்குச் சேரவும் மந்த்ரரத்நமென்கிற த்வயமே முக்கியமாகும். இதன் பொருளை அஷ்டச்லோகியில் பட்டர் அருளிச்செய்த ஒரு சுலோகங் கொண்டு இங்கு விவரிக்கிறோம்.

"நேத்ருத்வம் நித்யயோகம் ஸமுசிதகுணஜாதம் தநுக்க்யாபநஞ்ச
உபாயம் கர்த்தவ்யபாகம்து அந மிதுநபரம் ப்ராப்யமேவம் ப்ரஸித்தம்,
ஸ்வாமித்வம் ப்ரார்த்தநாஞ்ச ப்ரபலதர விரோதிப்ரஹாணம் தசைதாந்
மந்தாரம் த்ராயதேசேதி அதிகதநிகமஷ் ஷட்பதோயம் த்விகண்ட:" (5)

* * * த்வயத்திலுள்ள ஒவ்வொரு சொல்லையும் திருவுள்ளம்பற்றி அர்த்தமருளிச் செய்கிறாரிதில். ஸ்ரீ 1, மத் 2, நாராயண 3, சரணௌ 4, சரணம் 5, ப்ரபத்யே 6, ஸ்ரீமதே 7, நாராயண 8, ஆய 9, நம: 10 — என்று இப்பத்து சொற்கள் த்வயத்திலுள்ளதனால் முறையே ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு அர்த்தமாகப் பத்து அர்த்தங்களை யருளிச்செய்கிறார் இந்த ச்லோகத்தில்.

[நேத்ருத்வம்] இது ஸ்ரீ சப்தார்த்தம். புருஷகாரத்வமென்றபடி. "ணீஞ்— ப்ராபணே" என்கிற தாதுவடியாகப் பிறந்த சொல்லாகையாலே சேதநர்களை எம்பெருமானை ப்ராபித்தவர்களாகச் செய்வித்தலே நேத்ருத்வமாகும். இது புருஷகாரத்வமாகத் தேறிநின்றது. ஸ்ரீ சப்தத்திலிருந்து இது எங்ஙனே கிடைக்கிறதென்னில், ஸ்ரீ சப்தத்திற்கு ஆறு வகையான வ்யுத்பத்திகளுண்டு; ச்ரீயதே: ச்ரயதே, ச்ருணோதி, ச்ராவயதி, ச்ருணாதி, ச்ரீணாதி என்பன. இந்த ஆறு வ்யுத்பத்திகளாலும் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் புருஷகாரத்வம் தேறும். ப்ரக்ருதத்தில் முதலிரண்டு வ்யுத்பத்திகளை மாத்திரம் கொண்டாலும் போதும். ச்ரீயதே என்கிற கர்மணி வ்யுத்பத்தியில் எல்லாராலும் ஆச்ரயிக்கப்படா நின்றாளென்று பொருள்படுகின்றது. எம்பெருமான் எங்களைத் திருவுள்ளம் பற்றும்படி நீர் செய்தருள வேணுமென்கிற வேண்டுகோளுடன் சேதநர்களாலே ஆச்ரயிக்கப்படுபவள் என்றதாயிற்று. இனி ச்ரயதே யென்கிற கர்த்தரி வ்யுத்பத்தியில் எம்பெருமானை இவள் ஆச்ரயியா நின்றாளென்று பொருள்படுகின்றது. ஸ்வாச்ரிதர்களான சேதநர்களை அங்கீகரிப்பிக்கைக்காக எம்பெருமானிடம் மன்றாடுபவள் என்றதாயிற்று. ஆகவே ஸ்ரீ சப்தத்தினால் புருஷகாரத்வம் சொல்லிற்றாயிற்று.

[நித்யயோகம்] ஸ்ரீ சப்தத்தின்மேல் ஏறிக்கிடக்கின்ற மதுப்பென்கிற ப்ரத்யயத்தின் பொருள் இது. 'எப்போதும் கூடியிருத்தல்' என்னும் பொருளில் மதுப்பு வந்திருப்பதாகக் கொள்க. இத்தால், புருஷகார பூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதுமுண்டென்பது சொல்லப்பட்டதாயிற்று. அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்க வல்லவனான ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்தையும் சேதநர் செய்யும் குற்றங்களின் அளவில்லாமையையுங் கண்டு 'ஐயோ! என்னாகுமோ!' என்கிற பயத்தாலே ஈச்வரனை விட்டு ஒரு நொடிப் பொழுதும் அகலமாட்டாளென்க.

[ஸமுசித குணஜாதம்] இது நாராயணபதத்தின் பொருளை விவரிக்கிறபடி. நாராயணனென்பதற்குப் பல பல பொருள்களுண்டு. ஆங்காங்கு ஸந்தர்ப்பானுகுணமாகப் பொருள்கொள்ள வேண்டியதாகும். இங்கு வாத்ஸல்யம் ஸ்வாமித்வம் ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஜ்ஞானம் சக்தி ஆகிற இத்திருக்குணங்களையுடையவன் என்கிற பொருள் கொள்ளக்கடவது. ஏனெனில், ஆச்ரயிக்க ருசியுடைய சேதநன் அநாதிகாலமாகப் பண்ணின அபராதங்களைப் பார்த்துச் சீற்றங்கொண்டு இவனை அங்கீகரிக்கமாட்டேனென்றிருக்கு மெம்பெருமானுடைய ஸ்வாதந்திரியமானது, உபதேசத்தாலும் அழகாலும் வசீகரித்துக் காரியங்கொள்ளவல்ல புருஷகாரபலத்தாலே தலை மடிந்தொழிந்த பிறகு ஏற்கெனவே அந்த ஸ்வாதந்திரியத்தின் கீழ் அமுங்கிக்கிடந்து இப்போது தலையெடுக்குமவையான குணங்கள் இவையாதலால் இக்குணங்கள் இங்கு நாராயணபதத்திற்கு அர்த்தமாகக் கொள்ளப்படவேணும்.

இக்குணங்களுக்கு இவ்விடத்தில் உபயோகம் என்னவெனில், ஆச்ரயிக்க வந்தசேதநன் தன் தோஷங்களை நோக்கி அஞ்சாமைக்கு உறுப்பு **வாத்ஸல்யம்.** நமது காரியம் செய்வனோ மாட்டானோவென்று தளும்பாமல் அவசியம் செய்வனென்று தேறியிருப்பதற்குறுப்பு **ஸ்வாமித்வம்.** உபய விபூதிக்கும் கடவனாயிருக்கும் பெருமைக்கு ப்ரகாசகமான ஸ்வாமித்வத்தைக் கண்டு சேதநன் தனது தாழ்வையநுஸந்தித்து அகலாமைக்குறுப்பு **ஸௌசீல்யம்** அதீந்த்ரியன் [அதாவது, கண்ணுக்கு இலக்காகாதவன்] என்று பிற்காலியாமல் கண்ணாலே கண்டு ஆச்ரயிக்கைக்கு உறுப்பு **ஸௌலப்யம்.** ப்ராப்தி விரோதிகளைப் போக்கி ப்ராப்யனான தன்னை உபகரிக்கைக்கு உறுப்பு **ஜ்ஞாநசக்திகள்.** ஆக இப்படிப்பட்ட திருக்குணங்கள் நாராயண சப்தார்த்தமாக இங்கு அநுஸந்தேயமென்றதாயிற்று.

[தநுக்யாபநம்] 'நாராயணனுடைய திருவடிகளைப் பற்றுகிறேன்' என்று மூலத்தில் இருந்தாலும் திருவடிகளைச் சொன்னவிது திருமேனிக்கு உபலக்ஷணமென்று கொள்ளக் கடவது. விக்ரஹத்தில் ஏகதேசமான திருவடிகளைச் சொன்னபோதே புருஷகார பூதையான பிராட்டிக்கு இருப்பிடமாய் நாராயண பதத்திற் சொன்ன குணங்களுக்கு ப்ரகாசகமான திவ்யமங்கள விக்ரஹம் தெரிவிக்கப்பட்டதாகுமன்றோ.

[உபாயம்] த்வயத்தில் முதற்பதமான 'ஸ்ரீமந்நாராயண சரணௌ' என்றளவுக்கு இதுவரையில் அர்த்தம் சொல்லியாயிற்று. இனி இரண்டாவது பதமான சரணமென்பதற்கு அர்த்தம் சொல்லுகிறது. இஷ்டத்தைப் பெறுகைக்கும் அநிஷ்டத்தைத் தவிர்க்கைக்கும் தப்பாத வுபாயமாக-என்பது சரண சப்தார்த்தமென்று காட்டினாராயிற்று.

[கர்த்தவ்யபாகம்] இது ப்ரபத்யே என்கிற க்ரியாபதத்தை நோக்கியருளிச் செய்கிறபடி. 'ப்ரபத்யே' என்பதற்குப் பற்றுகிறேனென்று பொருள். ரக்ஷித்தருளவேணுமென்று வாயினால் பிரார்த்திக்கையாகிற கேவலவாசிகமாகவும், கைகூப்புதல் நமஸ்கரித்தல் முதலியவையாகிற கேவலகாயிகமாகவும், பற்றினாலும் பலன் ஸித்திக்கக் குறையில்லை. ஆனாலும் 'தத்ர ஜ்ஞாநாத் முக்தி:' என்று ஞானத்தாலே மோக்ஷமென்கையாலே இங்கு மாநஸமான பற்றுதலே சொல்லிற்றாகக் கடவதென்பது ஆசாரியர்களின் திருவுள்ளம். எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தை இசைகையாகிற ஒரு அத்யவஸாயமே இந்த ஞானம். இதுவே கர்த்தவ்யமென்று காட்டினபடி, வாசிக காயிக மாநஸிகங்களாகிற மூன்றில் இதுவொரு பாகமாகையாலே 'கர்த்தவ்ய பாகம்' என்றது.

ஆக இவ்வளவும் பூர்வகண்டத்தின் பொருள் பணிக்கப்பட்டதாயிற்று. இனி உத்தர கண்டத்தின் பொருள் பணிக்கத் தொடங்குகிறபடியை (அந) என்றிட்டுக் காட்டுகிறார். ... ... ... ... ... *

[மிதுநபரம் ப்ராப்யம்] பெருமாளும் பிராட்டியுமாக இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கையை ப்ரார்த்திப்பதே உத்தரவாக்யத்தின் திரண்ட பொருள். பூர்வவாக்யத்தை விவரிக்கும்போது ஸ்ரீசப்தத்திற்குக் காட்டின இரண்டு வ்யுத்பத்திகளும் அர்த்தமும், மதுப்புக்கு அர்த்தமான நித்யயோகமும் அப்படியே அநுஸந்திக்கத் தக்கது. ஆகவே, ஸ்ரீமதே என்பதற்கு—பெரிய பிராட்டியாரோடே கூடியிருக்குமவனுக்கு என்று பொருளாம். பிராட்டியின் நித்ய யோகத்தை யநுஸந்தித்த தானது இரண்டிடத்திலும் ஒரே விதமாக இருந்தாலும் அந்தந்த நிலைமைக்குத் தக்கபடி இவளிருக்கு மிருப்பை நிஷ்கர்ஷித்துக் கொள்ளவேணும். பூர்வ வாக்யத்தில் அநுஸந்தித்த நித்யயோகம் புருஷகாரத்வத்திற்காக இப்போது உத்தரவாக்யத்தில் அநுஸந்திக்கிற நித்தியயோகம்-கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வேந அந்வயம் எம்பெருமானுக்குப் போலவே பிராட்டிக்கு முண்டென்கைக்காக, ஆகவே கைங்கர்யத்திற்கு உத்தேச்யம் மிதுனமே யென்றதாயிற்று.

[ஸ்வாமித்வம்] இது நாராயண பதார்த்தம். நாராயணத்வமாவது உபய விபூதி நாதத்வமாகையாலே ஸர்வஸ்வாமியாயுள்ளவனுக்கு என்றதாகும். கைங்கர்ய ப்ரகரணமாகையாலே இப்பொருள்தான் பொருந்தும். ப்ராப்தனான ஸ்வாமியே யன்றோ கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாவான். அப்ராப்த விஷயத்தில் பண்ணும் கைங்கரியம் ரஸிக்கமாட்டாதே.

[ப்ரார்த்தநம்] நாராயண பதத்தின் மேலுள்ள சதுர்த்தீவிபக்தியின் அர்த்தமிது. ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸகலவித கைங்கர்யங்களையும் பண்ணக்கடவேனென்கிற பிரார்த்தனையைக் காட்டுவதாம் சதுர்த்தி. சேஷத்வஜ்ஞாந கார்யமான உபாய பரிக்ரஹத்துக்கு அடுத்தபடியாக ப்ராப்தமான இந்த சதுர்த்தியானது, பரிக்ரஹித்த உபாயத்தினுடைய பலனாக கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கிறபடியைத் தெரிவிக்கிறதென்கையே உசிதம்.

[ப்ரபலதரவிரோதி ப்ரஹாணம்] நம: பதத்தின் பொருள் கூறுகிறபடியிது. நமச்சப்தமானது பொதுவாக அஹங்கார மமகாரங்களைக் கழிக்குமதாகையாலே திருமந்த்ரத்தில் நடுவிலுள்ள நமஸ்ஸு போலே ஸ்வரூப விரோதி உபாய விரோதி புருஷார்த்த விரோதி ஆக மூன்றையும் கழிக்க வல்லதாயிருந்ததேயாகிலும் இங்கு அப்படியல்லாமல், கைங்கர்ய ப்ரார்த்தனைக்கு அடுத்துள்ளதாகையாலே இந்த கைங்கர்யத்தில் விரோதியைக் கழிக்கிறது. கைங்கர்யத்தைத் தன்னுடைய ரஸத்துக்கு உறுப்பாக நினைத்துப் பண்ணுகையே இங்கு விரோதியாகும். அங்ஙனே நினைத்துப் பண்ணலாகாது. 'பகவந் முக விகாஸ ஹேதுவாகையாலே இது நமக்கு ஆதரணீயம் என்கிற ப்ரதிபத்தியே நடக்கக்கடவது. இதில், தான்போக்தா என்கிற ப்ரதிபத்தியும் தன்னுடையது போகம் என்கிற பிரதிபத்தியும் நடக்குமாகில் அபுருஷார்த்தமாகும். அந்த ப்ரதிபத்தியே [பண்ணமே] ப்ரபலதரவிரோதியென்கிறது. அதனுடைய ப்ரஹாணமாவது கழிவு. அதுவே நமஸ்ஸின் பொருள் என்றதாயிற்று. ஆக இப்பத்து அர்த்தங்கள் த்வயத்திலே அநுஸந்தேயமென்று காட்டியருளினாராயிற்று.

தசைதாந் என்கிற ஸ்தானத்திலே தசார்த்தாந் என்பது சிலருடைய பாடம் ஆக இந்த அர்த்தங்களை [மந்தாரம் த்ராயதே] மனனம் பண்ணுகிற பக்த வர்க்கத்தை சப்த சக்தியாலும் அர்த்த சக்தியாலும் காக்கின்றது இந்த மந்த்ரரத்நம்.

' அதிகதநிகம:' என்பதே முன்னோர்கள் ஆதரித்த பாடம். கடவல்லியாகிற நிகமத்தில் [வேதபாகத்தில்] ஓதப்பட்டுள்ளது இந்த மந்த்ர மென்றபடி. அதிகதநியம:' என்பது சிலருடைய பாடம்.

[ஷட்பத:] இதில் முதல் பதத்தை ஸ்ரீமந், நாராயண, சரணௌ என மூன்று பதமாகப் பிரித்தும், ஸ்ரீமந்நாராயண, சரணௌ என இரண்டு பதமாகப் பிரித்தும், சிலர் வியாக்கியானிப்பது அஸம்பிரதாயமென்று காட்டுவதற்காக 'ஷட்பத:' என்று பதஸங்க்யையைக் காட்டினராயிற்று. ... ... ... (5)

---

# ஸ்ரீ ராமாயணார்த்த விசேஷம் (2)

பெருமாள் பஞ்சவடியில் பிராட்டியைப் பிரிந்து வருந்தி இளையவனோடு உசாவிக்கொண்டு பம்பைக்கரையில் எழுந்தருளா நிற்க, அங்கே வீசுகின்ற காற்றின் கொடுமையை ஸஹிக்கமாட்டாதவராகி இளையோனை நோக்கிச் சொல்லுகிற வார்த்தை —

*** பத்ம ஸௌகந்திக வஹம் சிவம் சோகவிநாசநம்**
**தந்யா லக்ஷ்மண ! ஸேவந்தே பம்போபவநமாருதம் ***

என்பது. 'இந்த காற்றை ஆவலோடு எதிர்பார்த்து அநுபவிப்பவர்கள் பாக்ய சாலிகள்' என்று சொல்லுவது இந்த சுலோகத்தின் தாற்பரியம் ; இப்படிச் சொன்னதனால்—பெருமாள் தமக்கு இக்காற்று அஸஹ்யம் என்பதும், அத்யந்த க்லேச ப்ரதாயகம் என்பதும் எளிதாக விளங்கும் சுலோகத்திலோவென்னில், வீசுகின்ற காற்றுக்கு **சோகவிநாசநம்** என்று விசேஷணமிடப்பட்டுள்ளது. **சோகவிவர்த்தநம்** என்னவேண்டுமிடத்து **சோகவிநாசநம்** என்றது எங்ஙனே பொருந்தும்? என்று கேள்வி வரும். இதற்கு ஸாமாந்யமதிகள் ஒருவாறு ஸமாதானம் சொல்லிவிடலாம் ; (அதாவது) இக்காற்றை ஆவலோடு அநுபவிக்கிற பாக்யசாலிகளின் கருத்தாலே சோகவிநாசநமென்கிறது ; அன்னவர்களின் சோகத்தை இது போக்கக்கூடியது தானே — என்று. இப்படித்தான் ஆங்காங்கு ப்ரவசனம் செய்வார் பலரும் சொல்லி வருகின்றனர். இதுவே அர்த்தமாகில் **ஸந்தோஷதாயகம்** என்றிருக்குமேயல்லது **சோகவிநாசநம்** என்றிருக்க ப்ரஸக்தியில்லை. ஏனில்லை? என்று கேட்டுக் கொண்டிருப்பர்கள் அரஸிகர்கள். இங்கு நம் ஆசாரியர்கள் பணிக்கும் பொருள் கேளீர் ;— (நாச்சியார் திருமொழி 8—2) "......[**சோகவிநாசநம்**] நம்மைச் சித்திரவதம் பண்ணுது ; சோகம் மறுவலிடாதபடி பண்ணும்போலே யிராநின்றது "........ திருவாய்மொழியிலும் (1—4—7.) ["**சோகவிநாசநம்**"] நம்மை இனி ப்ராணனோடே வைத்து நலியாது போலேயிருந்தது, "—இப்பங்க்திகளின் பொருள் குருமுகமாகக் கேட்டறிய வேண்டியதாதலால் பிறர்க்கு அறிவரிதே—நாமே விவரிக்கிறோம். சோகநாசநம் என்னாதே சோகவிநாசந மென்றிருக்கையாலே சோகத்திற்கு ஆத்யந்திகவிநாசம் செய்யுமது என்று பொருள்படும். உயிரும் உடலும் இருந்தாலன்றோ மீண்டும் மீண்டும் சோகமுண்டாதற்கு அவகாசமுள்ளது. அப்போதுதான் சித்ரவதமும் பண்ணமுடியும். இக்காற்று உடலையும் உயிரையும் ஒருநொடியில் முடித்துவிடும் போலிருக்கிறதப்பா ! என்றபடி. இத்தகைய பொருள் பிறர்க்குத் தோன்றுததோடு ரஸிக்கவும் மாட்டாதந்தோ ! அன்னவர்கள் "ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் மூலத்திற்குச் சேராமல் ஏதோ எழுதி வைக்கிறார்கள் ! என்றுதானே சொல்லிப் போதைப் போக்கவேண்டும். போக்குக. வான்மீகி முனிவர்க்கு இப்பொருள் விவக்ஷிதமானால் (சோகவிநாசநம்) என்னாதே **ப்ராணவிநாசநம்** என்றெழுதியிருக்கமாட்டாரா? என்றும் வாதாடுவர்கள். ஆடுகவாடுகவே. ... ... ... *

---

# 7. விசிஷ்டாத்வைத நுட்பம்

## — உலகவழக்கு நூல்வழக்கென்று இரண்டுண்டு —

உலகவழக்காவது லோக வ்யவஹாரம். நூல்வழக்காவது சாஸ்த்ர வ்யவஹாரம். உலகவழக்குத் தான் முதலில் தோன்றியது. பிறகுதான் சாஸ்த்ர வ்யவஹாரம் தோன்றியது. உலகமும் அநாதியாய் சாஸ்த்ரமும் அநாதியாயிருக்கும் போது சாஸ்த்ர வ்யவஹாரம் பிறகு தோன்றியதென்று எங்ஙனே சொல்லலாமென்னில்; நன்னூலில் " இலக்கியங் கண்டதற்கு இலக்கணமியம்பலின் " என்றொரு சூத்திரமுள்ளது. இதனால் இலக்கியம் முற்பட்டதென்றும் இலக்கணம் பிற்பட்டதென்றும் விளங்குகின்றது ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களுங்கூட லக்ஷ்யம் முற்பட்டதென்றும் லக்ஷணம் பிற்பட்டதென்றும் கொள்கையுடையராகக் காணப் படுகிறார்கள். உண்மையில், கண்ட லக்ஷ்யங்களை சிக்ஷிப்பதற்காகத்தானே லக்ஷணசாஸ்த்ரம் தோன்றுகின்றது. ஆகவே இந்த முற்பாடு பிற்பாடுகளில் விவாதங் கொள்ள இடமில்லை. ஆனால், லக்ஷண சாஸ்த்ரம் பிற்பட்டதென்பார் அது தோன்றின காலங்கண்டு கூறுகின்றாரல்லர். லக்ஷ்யம் தோன்றினதற்கும் அடி தெரியாது, லக்ஷணம் தோன்றினதற்கும் அடி தெரியாது. ஆயினும் ஒன்று முற்பட்டதென்றும் மற்றொன்று பிற்பட்டதென்றும் சொல்லப்படுகிறது. ஜீவாத்மாவுக்கு பகவத் ஸம்பந்தமும் ப்ரக்ருதி ஸம்பந்தமுமாகிய இரண்டும் அநாதியாயிருக்கச் செய்தேயும், பகவத் ஸம்பந்தந்தான் அநாதியென்றும், ப்ரக்ருதி ஸம்பந்தம் வந்தேறி யென்றும் கூறப்படுகிறது. இதைப்பற்றி நம் ஆசாரியர்கள் எழுதுகையில், [ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில்] —

" அசித் ஸம்பந்தம் வந்தேறியாய் கர்மோபாதிகமாகையாலே அநித்யமாயிருக்கும். பகவத் ஸம்பந்தம் அநாதியாய் நிருபாதிகமாகையாலே நித்யமாயிருக்கும். ஆனால் வந்தேறியானதை அநாதியென்பானென்னென்னில்; வந்தேறின காலத்துக்கு அடி தெரியாமையாலே அநாதியென்று ப்ரமாணங்கள் சொல்லுகையாலே "

என்றருளிச் செய்கிறார். அந்த நியாயம் இங்கும் கொள்ளலாம். ஆக, லோக வ்யவஹாரம் முற்பட்டதென்றும் சாஸ்த்ர வ்யவஹாரம் பிற்பட்டதென்றும் கொள்ளக் குறையில்லை.

இனி, லோக வ்யவஹாரங்கள் எப்படியிருக்கின்றன, சாஸ்த்ர வ்யவஹாரங்கள் எப்படியிருக்கின்றன என்பதைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். சப்தங்களுக்கு ஸப்த விபக்திகள் [ஏழு வேற்றுமைகள்] ஏற்பட்டிருக்கின்றன. நாம் வ்யவஹாரங்கள் செய்யும்போது நமது வாக்குகளில் இந்த விபக்திகள் கலசிக் கலசி வருகின்றன. ஒரே விபக்தியால் நாம் வ்யவஹரிப்பதில்லை, வ்யவஹரிக்கவும் முடியாது. பல விபக்திகளைக் கலந்தே நாம் வ்யவஹரிக்க வேண்டியதாகிறது. உதாரணமாகப் பார்க்கலாம்—" ஸ்ரீமந்நாராயணன் நம் போன்ற சேதநர்களைப் பரம க்ருபையினாலே ரக்ஷித்தருளும் பொருட்டுத் திருப்பாற் கடலினின்றும் வஸுதேவருடைய புதல்வராய் மதுரையிலே அவதரித்தருளினான் " என்கிறோம். இதில் வரிசையாக ஏழு வேற்றுமைகளும் வந்திருப்பதைக் காணலாம். நம்முடைய எல்லா வ்யவஹாரங்களும் இப்படி ஏழு வேற்றுமைகளையுங் கொண்டேயிருக்குமென்கிற நியதியில்லை. அதமபக்ஷம் இரண்டு விபக்திகளையாவது கொண்டிருக்கும். 'நான் வந்தேன்' 'நான் போனேன்' என்னும் வ்யவஹாரங்களில் (நான்) என்கிற முதல் வேற்றுமை யொன்றுதானே காணப்படுகிறது, வேறு வேற்றுமையில்லையே என்று நினைக்கலாகாது. இன்னவிடத்திற்குப் போனேன் என்றதாகவே தேறுமாதலால் வேறொரு விபக்தியும் சேர்ந்தேயிருப்பதாக அறிக.

'இராமன் யோக்யனே; கண்ணன் கள்வனே' என்று சொல்லுவோமானுல், இராமனை நான் யோக்யனுகவே கருதுகின்றேன். 'கண்ணனை நான் கள்வனுகவே கருதுகின்றேன் என்றே அந்த வாக்கியங்கள் விரியுமாதலால் அங்கும் பல வேற்றுமைகள் உள்ளனவேயாம். ஆக இவ்வளவும் நாமெழுதியது பெரும்பான்மையைப் பற்ற ஒரே விபக்தியினுல் வ்யவஹாரம் செய்வது தவறன்று, அஸம்பாவிதமன்று. அப்படிப்பட்ட விடங்களில் என்ன தாற்பரியம் என்பதைப் பற்றியே நாம் ஆலோசிக்கவேணும், இந்த பிரமசாரி நெருப்புதான், இந்த மாணுக்கன் சிங்கக்குட்டிதான், திருவடி தாமரைதான், திருமுகம் சந்திரன்தான்...என்றிப்படி பல்லாயிரம் வ்யவஹாரங்கள் செய்கிருேம். இவ்விடங்களில் கருத்தை ஊன்றி நோக்கவேணும்; பிரமசாரியும் நெருப்பும் ஒன்ருய்விட முடியாது; மாணுக்கனும் சிங்கக்குட்டியும் ஒன்ருய்விட முடியாது. திருமுகமும் சந்திரனும் ஒன்ருய்விட முடியாது. ஆனுல் ஒன்றுபோல ஏன் சொல்லுகிருேமென்னில்; இரண்டுக்கும் அத்யந்த ஸாம்யமிருப்பது பற்றிச் சொல்லுகிருேம்.

'மந்த்ரியே அரசன்' என்றும் சொல்லுகிருேம். மந்திரி அரசனுகமாட்டான், அரசன் மந்த்ரியாகமாட்டான். பின்னை ஏன் சொல்லுகிருேமென்னில், மந்த்ரி சொன்னபடியெல்லாம் அரசன் ஆடுகிருன் என்கிற கருத்தைக்கொண்டு சொல்லுகிருேம். இங்கு அத்யந்த விதேயத்வத்தில் நோக்கு. ஆக இவ்வளவும் லோக வ்யவஹாரங்களைப் பற்றிப் பேசினேம்; இனி சாஸ்த்ர வ்யவஹாரங்களிற் செல்வோம். சாஸ்த்ரவ்யவஹாரங்களும் லோகவ்யவஹாரங்களைப் போன்றேயிருக்கும். உலக வழக்குகளில் காணும் கருத்தே நூல் வழக்கிலும் காணலாகும். பல வேற்றுமைகளைக் கொண்ட வாக்கியங்களை உலகில் நாம் வ்யவஹரிப்பது போலவே சாஸ்த்ரங்களும் வ்யவஹரிக்கின்றன. * **ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:. அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:** * என்கிற வொரு ஸ்ரீராமாயண ச்லோகத்தையெடுத்துக்கொள்வோம் இதில் ப்ரதமை, த்ருதீயை, ஷஷ்டி, ஸப்தமி ஆகிற நான்கு விபக்திகள் கலந்திருக்கின்றன. உபநிஷத்து முதலிய எந்த சாஸ்த்ரத்திற் சென்ருலும் இங்ஙனே பல விபக்திகள் கொண்ட வாக்ய ராசிகளை நாம் காணலாம். இதைப்பற்றிச் சொல்ல வேண்டிய விஷயம் அதிகமாக ஒன்றுமில்லை. ஒரே விபக்தி கொண்ட வாக்யங்களும் சாஸ்த்ரங்களிற் பல காணப்படுகின்றன. * **ததேவாக்நிஸ் தத்வாயுஸ் தத் ஸூர்ய:** * என்கிறவோர் உபநிஷத் வாக்யத்தையெடுத்துக்கொள்வோம்; அந்த ப்ரஹ்மந்தான் அக்நி, அந்த ப்ரஹ்மந்தான் வாயு; அந்த ப்ரஹ்மந்தான் ஸூர்யன்; அந்த ப்ரஹ்மந்தான் சந்திரன் என்று இந்த வாக்யத்தினுல் சொல்லப்படுவதாக அறிகிருேம். ப்ரஹ்மத்திற் காட்டிலும் அக்நி வேறு, வாயு வேறு, ஸூர்யன் வேறு, சந்திரன் வேறு என்பதை நாம் ச்ருதிகளைக் கொண்டே நன்கு அறிகிருேம். *ததேவாக்நிஸ் தத் வாயு:* என்றேதின உபநிஷத்திலேயே * **பீஷாஸ்மாத் வாத: பவதே** * * **பீஷோதேதி ஸூர்ய:** * இத்யாதி வாக்யங்களையும் காண்கிருேம். பரம புருஷனுடைய கட்டளைக்கு உட்பட்டு அவனுக்கு அஞ்சி நடுங்கி வாயுதேவதை வீசுவதாகவும் ஸூர்யன் உதிப்பதாகவும்...இதில் வ்யக்தமாகச் சொல்லுகிறது. இப்படி பகவானுக்கு அஞ்சி நடுங்கிப் பணிவிடை செய்கிற கீழ்ப்பட்ட தேவதைகள் பகவான் தானேயாக இருக்க முடியுமோ? ஒருகாலும் இருக்கமுடியாது. உண்மை இப்படியிருக்க, யதார்த்த வாதியான உபநிஷத்து *ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா:* என்றும் *இந்த்ரச்ச நாராயண: சந்த்ரச்ச நாராயண:* என்றும் ஏன் சொல்லுகிறதென்று ஆராயவேணும். இதை நாம் நம்முடைய அல்ப புத்தியைக்கொண்டு ஆராயவேண்டா. வேதமே ஆராய்ந்து தெளிவு பிறப்பித்திருக்கின்றது. * **நாராயண ஏவேதக்ம் ஸர்வம்** * என்பதாக ஓர் உபநிஷத் வாக்யம் ப்ரஸித்தமாக வுள்ளது. 'எல்லாப் பொருள்களும் நாராயணனே' எனப்படுகிறது இதனுல்; இப்படிச் சொல்லுவதன் காரணத்தையும் அவ்விடத்திலேயே

* ஸர்வபூதாந்தராத்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண, * என்கிற வாக்யம் நன்கு விசதப் படுத்திவிட்டது. ஒவ்வொரு பொருளிலும் பரம புருஷன் வியாபித்திருப்பதனுல் இந்த வ்யாப்யவ்யாபக பாவ ஸம்பந்தமடியாகவே அபேதம் சொல்லப்படுகிற தென்று தெளிவித்தபடி.

பரப்ரஹ்ம மொன்று தவிர வேறு பதார்த்தம் உண்மையில் எதுவுமே கிடையாதென்று கூறுகின்றவர்கள் அபேதத்தைச் சொல்லுகின்ற வேதவாக்யங்களை மாத்திரமே கண்டு அத்வைதவாத கோலாஹலங்களை அபரிமிதமாகச் செய்கிருர்கள். லோக வ்யவஹார ரீதியில் தான் சாஸ்த்ர வ்யவஹாரங்களுமுள்ளன வென்பதை நன்ருக நெஞ்சிற் கொண்டு நோக்குமளவில் விசிஷ்டாத்வைதக் கொள்கை தான் பரிபூர்ணமான ஆதாரமுடையதென்று விளங்கும்.

மற்ருெரு சிறு விஷயமும் கேண்மின் ; * ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி * என்ருெரு வாக்யத்தைப் பற்றிக்கொண்டு ப்ரஹ்மத்தோடு ஐக்யமாய் விடுவதே மோக்ஷமென்கிருர்கள். ஐக்யமாவதே மோக்ஷமாகில் * ததாவித்வாந்...... நிரஞ்ஜநः பரமம் ஸாம்யமுபைதி * என்று சாந்தோக்யோபநிஷத்தில் [பரமம் ஸாம்ய முபைதி என்று] சொல்லியிருக்கிறதே, ஸாம்ய மென்ருல் என்ன? முகம் சந்திரனேடு ஸாம்யமுடையது என்ருல் முகமென்கிற வஸ்து வேருயும் சந்திரனென்கிற வஸ்து அதனில் வேருயுமிருந்தாலொழிய ஸாம்யம் நிர்வஹிக்க முடியாதன்ருே ; * தத்பிந்நத்வே ஸதி தத்கதபூயோதர்மாதத்வம் ஸாம்யம் * என்றுதானே ஆலங்காரிகர்கள் ஸாம்யலக்ஷணம் சொல்லுகிருர்கள் ; பரப்ரஹ்மம் வேருயும் முக்த புருஷன் வேருயுமிருந்தாலொழிய 'ஸாம்யமுபைதி' என்றது சேராதே—இத்யாதிகளைச் சிறிதும் ஆலோசியாமல் ப்ரஹ்மாத்வைத வாதம் செய்கின்ருர்கள். "மாணவக: அக்நிரேவ பவதி" என்ருல் என்ன அர்த்தமோ அது தான் (ப்ரஹ்மைவ பவதி) என்பதற்கும் — என்றறிவதற்கு சிரமமொன்றுமில்லையே. இவ காரஸ்தாநே ஏவகார: என்பதை வேதத்தைக்கொண்டே ஸ்தாபிக்கிருேம்.

தைத்தீரிய ஸம்ஹிதை இரண்டாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் * விஷ்ணுரேவ பூத்வா இமாந் லோகாந் அபிஜயதி * என்ருெரு வாக்யமுள்ளது. இது மோக்ஷ ப்ரகரணமன்று. இங்கு ஏவகாரம் இவகாரஸ்தாநே வந்திருக்கிறதென்பதை வேதபாஷ்யகாரர்களும் அறிந்திருக்கின்ருர்கள். *ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி* என்றவிடத்துள்ள ஏவகாரமும் இதுபோன்றதே யென்பதை யறிவதற்கு அசக்தர்களல்லர். ஆளவந்தாரருளிச் செய்த "அபிநிவேச வசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:" என்கிற ச்லோகரத்நமே ஸுப்ரதிஷ்டிதமாகிறதென்று நிற்கின்ருேம். ... ... ... ... ... *

## 8. ஐந்து சிஷ்யர்களின் இதிஹாஸம்

ஒரு அக்ரஹாரம். அங்கு ஒரே திருமாளிகை. அத்திருமாளிகைக்காரர் பரமாஸ்திகர். ஹவ்யகவ்யப்ரஸக்தி நேர்ந்தால் உறவினருள்ள வேறே யொரு நகரத்திற்குச் சென்று நடத்திவருவதோ அவர்களை இங்கு வரவழைத்து நடத்திக் கொள்வதோ அவருடைய வழக்கம். இப்படி யிருக்கையில் அந்த அகரஹாரத்திற்கு ஒரு ஜீயர் ஸ்வாமி ஐந்து சிஷ்யர்களுடன் வந்து சேர்ந்து அவ்விடம் வாஸ யோக்யமாயிருக்கிறதென்று உகந்து ரஹஸ்யக்ரந்த காலக்ஷேபம் நடத்திவந்தார்.

அவ்வூரில் ஒரு திருமாளிகைக்காரர் இருக்கின்ருரே, அவருடைய குமாரனுக்கு உபநயநம் செய்ய நேர்ந்தது. அவர் ஜீயர் ஸ்வாமியிடம் வந்து "இவ்வுபநயனத்தை இவ்விடத்திலேயே நடத்தலாமென்று பார்க்கிறேன்; ஸ்வாமி ஸன்னிதியில் காலக்ஷேபம் செய்கிற ஐவரையும் அனுப்பியருளி கோஷ்டீபரிபாலனம் செய்விக்கவேணும்" என்று விஜ்ஞாபித்தார். ஸ்வாமியும் 'இதற்கென்ன ப்ரமாதம், அப்படியேயாகிறது' என்று இசைந்து சிஷ்யர்களுக்கும் நியமனம் தந்தருளினர்—

'இவர் அபேக்ஷிக்கிற ஸமயங்களில் சென்றிருந்து கோஷ்டியை நடப்பித்து வாருங்கள்' என்று......பிறகு அந்த க்ருஹஸ்தர் அளவுகடந்த ஆனந்தங்கொண்டார். ஸத்பாத்ரங்களான ஐந்து ஸ்வாமிகள் நம்முடைய குடிலை அலங்கரித்து கோஷ்டியைச் சிறப்பாக நடத்தி வைக்கும்படியான பாக்கியம் பெற்றேமேயென்று உள்ளம் பூரித்தார். உபநயந முஹூர்த்தநாள் ஸமீபித்துவிட்டது. முதல்நாள் ததீயாராதனம் என்று நடத்துவதுண்டே; அன்றைய வெற்றிலை பாக்கு கோஷ்டிக்காக ஜீயர் ஸ்வாமியின் சிஷ்யர்களை ஆதரவோடு அழைத்தார். அவர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்களில் ஒருவர் வயது சென்றவர்; மற்றொருவர் வித்யையில் சிறந்தவர்; இன்னொருவர் குலத்தில் உயர்ந்தவர்! வேறொருவர் வடிவழகில் சீரியர்; பிறரொருவர் மிக்க தனிகர். சந்தனமெடுக்கவேண்டிய ஸமயம் வந்தது. க்ருஹஸ்வாமியானவர் சந்தனமெடுத்து வயதில் பெரியவரான ஸ்வாமிக்குக் கொடுக்கப் போனார். அவரும் கைநீட்டி வாங்கப் போகையில் வித்யையில் சிறந்தவரான மற்றொருவர் 'ஓய்! அநுசிதமான காரியம் செய்யத்தகாது; தலை நரைத்ததனாலேயே ஓர் ஏற்றம் வந்துவிடுமா? "வித்வாந் ஸர்வத்ர பூஜ்யதே" "ஜ்ஞாநேந ஹீந: பசுபிஸ் ஸமாந:" என்பதை நீர் கேட்டதில்லையோ! இப்படி வாரும், என்றழைத்தார். அதுகேட்ட அவர் 'யுக்தந்தான் இது' என்றெண்ணி அந்த வித்வானிடம் சந்தனம் கொடுக்கப்போனார்.

அப்போது, குலத்தில் பெருத்தவரான இன்னொருவர் 'ஓய்! வயஸ்ஸையும் வித்யையையும் யார் கேட்பார்? ஆபிஜாத்யமன்றோ அனைத்திலும் சிறந்தது; என்னுடைய குலம் எப்படிப்பட்டதென்று ஜீயரையே போய்க் கேளும்; அல்லது இவர்களையே கேட்டுப் பாரும்: திருமங்கையாழ்வார் 'குலந்தரும் செல்வம் தந்திடும்' என்று குலத்தைத்தானே முதலில் சொன்னார்; அறிவுகெட்ட அந்தணரே! இப்படி வாரும்" என்றழைத்தார். இதுவும் யுக்தந்தானென்று அவரிடம் கொடுக்கப் போனார். அப்போது தனத்தில் பெருத்த இன்னொருவர் 'ஓய் அசட்டு ப்ராஹ்மணரே! * ஸர்வம் அர்த்தவதா ஜிதம் * என்று கேட்டிலீரோ? * பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணில் போற்றியென்றேற்றெழுவர், இருள்கொள் துன்பத்தின்மை காணில் என்னே யென்பாருமில்லை * என்ற ஆழ்வார் பாசுரமுமறிந்திலீரோ? இவர்களைப்போல் நான் தரித்ரனல்லேன்! உலகமறிந்த தனிகன்; இப்படி வாரும் என்றழைத்தார். வாஸ்தவந்தானென்று அவரிடம் கொடுக்கப் போனார். உடனே அழகிற் சிறந்த மற்றொருவர் 'ஓய் விவேகமற்றவரே! * ரூபமேவாஸ்ய ஏதந்மஹிமாநம் வ்யாசஷ்டே * என்று வேதத்தில் எத்தனை தடவை ஓதியிருக்கிறது; இந்த குக்ராமத்தில் பிறந்த நீர் வேதத்தைக் காதாலும் கேட்டிருக்கமாட்டீர், ஆண்டாள் * குழலழகர் வாயழகர் கண்ணழகர் * என்று அழகில் ஈடுபட்டுப் பேசியிருப்பதுகூட உமக்குத் தெரியாது போலும். இப்படி வாரும், என்னழகைப் பாரும். என்றார். ஸரிதானென்று அவரிடம் செல்ல, மற்றையோர் பழையபடியே கூறத் தொடங்க, சந்தன தாம்பூல விநியோகமில்லாமலே கோஷ்டியை முடித்திட்டு அந்த க்ருஹஸ்தர் ஜீயரிடம் சென்று விரிவாகச்சொல்லி முறையிட்டு, நாளைக்கு உபநயன கோஷ்டியாவது பிணக்கில்லாமல் ஒழுங்காக நடக்கும்படி நியமித்தருள வேணுமென்று வேண்ட, அப்படியேயாகிறதென்று சொல்லி ஸமாதானப்படுத்தி அவரையனுப்பிவிட்டு, மறுநாள் காலை ஐவரையும் அழைத்து "நைச்சியம் பாவிக்க வேணும், போய் வாருங்கள்" என்று சொல்லியனுப்பினராம். அப்படியேயென்று சொல்லி வந்த அவர்கள் சந்தன விநியோக ஸமயத்தில் ஒவ்வொருவரும் (அவரிடத்தில் ஆகட்டும்) (அவரிடத்தில் ஆகட்டும்) என்று சொல்லிக் கைகூப்பிவிட்டார்கள். முதல்நாள் போலவே அன்றும் முடிந்துவிட்டது. இவர்கள் காலக்ஷேபாதிகாரிகள்.

— ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி: —